உ

ஓம்

பரப்பிரஹ்மணேநம:

# ஆனந்தபோதினி

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"—திருவள்ளுவர்.



| தொகுதி | பிரபவஞு தைமீ கஉ | பகுதி |
| --- | --- | --- |
| 13 | 1928ஞு ஜனவரிமீ 14உ | 7 |

## கடவுள் வணக்கம்.

அவனன்றி யோரணுவு மசையா தெனும் பெரிய
வாப்தர் மொழி யொன்று கண்டால்
அறிவாவ தேதுசில வறியாமை யேதிவை
யறிந்தார்க ளறியார்கள் யார்
மௌனமொ டிருந்ததா ரென்போ லுடம்பெலாம்
வாயாய்ப் பிதற்று மவரார்
மனதெனவு மொருமாயை யெங்கே யிருந்துவரும்
வன்மையொ டிரக்க மெங்கே
புவனம் படைப்பதென் கர்த்தவிய மெவ்விடம்
பூதபே தங்க ளெவிடம்
பொய்மெயித மகிதமேல் வருநன்மை தீமையொடு
பொறைபொறு மையு மெவ்விடம்
எவர்சிறிய ரெவர்பெரிய ரெவருறவ ரெவர் பகைஞர்
யாதுமுனை யன்றி யுண்டோ
இகபர மிரண்டினிலு முயிரினுக் குயிராகி
யெங்குநிறை கின்ற பொருளே. (1)

சாட்டையிற் பம்பர சாலம் போலெலாம்
ஆட்டுவா னிறையென வறிந்து நெஞ்சமே
தேட்டமொன் றறவருட் செயலி னிற்றியேல்
வீட்டறந் துறவற மிரண்டு மேன்மையே. (2)

துய்யன் றண்ணருள் வடிவினன் பொறுமையாற் றுலங்கும்
மெய்ய னென்றுனை யையனே யடைந்தனன் மெத்த
நொய்ய னுண்ணிய வறிவில னென்றைநூ ளுக்கும்
பொய்ய னென்றெனைப் புறம்விடி னென்செய்வேன் புகலாய். (3)

# அரும்பொருள் விளக்கம்.

1. இறைவன் விஸ்வரூபியாதலின் அப்பெருமானுக்கு உலகம் திருமேனியாக விளங்கும். ஆகவே அவ்விறைவன் அசையின் உலகம் அசையும். இவ்வுண்மை, துரியோதனனது வேண்டுகோளுக் கிசைந்து, அருச்சுனனுடைய தவத்தைக் கெடுக்கப் பன்றிவடிவெடுத்துவந்த மூகாசுரனைக் கொல்லவும், மதுரையில் வைகைநதிப் பெருக்கை யடைக்க வுத்தரவுபெற்ற பிட்டு வாணிச்சியாகிய வந்தியின் மனக்குறையைத் தீர்க்கவும் மாறுவேடம் பூண்டுவந்த சிவபெருமானை முறையே அருச்சுனனும் பாண்டியனும் அடித்த போது அந்த அடி எல்லா வுயிர்கள்மீதும் பட்டமையாலும், காளமேகப் புலவரை யொருவர் "ஈயேற மலை குலுங்கிற்று" என்னுங் கருத்துவர ஒரு வெண்பா பாடமுடியுமோ வென்று கேட்க, அப்புலவர் 'மலைமட்டுமா அண்ட சராசரமெல்லாம்' குலுங்கினவென்று பாடக்கூடும் என்று சொல்லி,

"வாரணங்கள் எட்டும் மகமேரு வுங்கடலும்
தாரணியும் எல்லாம் சலித்தனவால்—நாரணனைப்
பண்வாய் இடைச்சி பருமத்தி னாலடித்த
புண்வாயில் ஈமொய்த்த போது"

என்னும் பாடலைப் பாடினமையாலும் இனிது புலனாம்.

சர்வாந்தரியாமியாய் எல்லா வுயிர்களின் உள்ளும் புறமும் இருந்து அவ்வுயிர்களை அவற்றின் கன்மங்களுக்குத் தக்கபடி இறைவனே ஆட்டுவிக்கின்றானென்பதை மிக்கோர் உணர்த்துகின்றமையின் அதனையே ஆசிரியர் 'அவனன்றி யோரணுவு மசையாது' என்கிறார்.

இதனை உள்ளபடி யறிந்தால் நாம் வேறு பேச வழியிராது.

ஆப்தர்=அனுகூலர்.
வன்மை=கடினம்.
புவனம்=பூமி.
சர்த்தவியம்=செய்யத்தக்கது.

2. இதுவும் மேற்பாட்டின் கருத்தை யனுசரித்ததாம்.

சாட்டையில் பம்பரசாலம் = கயிற்றாலாட்டப்படும் பம்பரக்கூட்டம்; சாட்டை என்பது இங்கு பாசத்தையும், பம்பரசாலமென்பது பசுக்களையும், ஆட்டுவான் என்பது இறைவனையும் குறிக்கும்.

அருள்வயப்பட்டவர்க்கு எத்தகைய ஆசிரமங்களும் சமம் என்பார் 'அருட்செயலி னிற்றியேல் வீட்டறந் துறவறம் இரண்டு மேன்மையே' என்றார்.

வீட்டறம்=இல்லறம்.
தேட்டம்=கவலை.

3. ஜீவன் எக்காலத்தும் தனக்கென வோர் சுதந்தரமில்லாது வாழ்பவனாகலின் அவனை யொன்றைப் பற்றுதற்கு முக்காலத்தினும் முடியாதாகையால், சர்வ சுதந்தரமும் உள்ள இறைவனே அவனை வலிய கைப்பற்றியாட்கொள்ளவேண்டு மென்பார் 'புறம்விடி னென்செய்வேன்' என்றார். ஜீவனுக்குப் பொய்பேசுதல் இயற்கையாதலின், அச்சீவன் ஒருபொய்யைப் பிறர் நம்பப் பலவாக்குதலால் 'ஒன்றை நூறுக்கும் பொய்யன்' என்றார்.

நொய்யன்=அற்பன்.

*




## தேசியப் பாடல்களைப் பாடவேண்டிய கிரமங்கள்.

உண்மைத் தேசாபிமானிகளே !

பாரத மக்களாகிய நாம், நம்முடைய தேசத்தையும், தேச பக்தர்களையும் புகழ்ந்து பாடவேண்டியதும், பாடுவதைக் கேட்கவேண்டியதும் நம்முடைய கடமைகளில் மிக முக்கியமானவைகளாம். ஆனால், அவ்வாறு பாடுவதிலும், கேட்பதிலும் சில கிரமங்களை அனுசரிக்கவேண்டும்; அங்ஙனம் அனுசரிக்காமல் பாடுவதும், கேட்பதும் பொருந்தாச் செயல்களாகும்; அவற்றால் மிகுந்த பாவஞ் சேர்வதோடு நம் தேசத்திற்கும், தேசபக்தர்களுக்கும் உயர்வுண்டாதல் ஒழிந்து தாழ்வே உண்டாகும்.

மேற்கூறிய தேசியப்பாடல்கள், தமிழ் இலக்கண இலக்கியங்களிலும், சங்கீதத்திலும் தேர்ச்சியடைந்து, உண்மையான தேசபக்தியும் கொண்டு விளங்கும் புத்திமான்களால் தமிழ் இலக்கணங்கட்கும், இசை யிலக்கணங்கட்கும் பொருத்தமாக எவ்வகையிலும் பிழையின்றிச் சிறந்த பொருளமைப்புக்களுடனும், உயர்ந்த சந்த இனிமைகளுடனும், கேட்போர் மனத்தை உருக்கும் விதமாகவும் அமைக்கப்படவேண்டும். இத்தகைய இலட்சணங்களோடு கூடிய பற்பல பாடல்கள், உண்மைத் தேசபக்தராகிய திருவாளர். சுப்பிரமணியபாரதியார் முதலிய சிலரால் பாடிவைக்கப்பட் டிருக்கின்றன. மேலும் மேலும் புதியனவாக அந்தப் பாடல்களை அழகிய அமைப்புக்களுடன் இயற்றத்தக்க சிறந்த கல்விமான்கள் பலர் இருக்கின்றனர்.

தேசியப்பாடல்களைப் பாட விரும்புவோர், இத்தகைய கல்விமான்களால் இயற்றப்பட்டவைகளையே பாடவேண்டும்; கேட்போரும் அவற்றையே கேட்கவேண்டும். இன்னும் அவற்றைட்

பாடுவோர், மனம், வாக்கு, காயம் என்னும் திரிகரண சுத்தி யுடையவர்களாயும், பாடல்களிலுள்ள அர்த்தசாரங்களைத் தாமே தெரிந்துகொள்ளத் தக்க கல்வியறிவுள்ளவர்களாயும், இனிய குர லுடையவர்களாயும், அப்பாடல்களின் மீதும் தேசபக்தர்களின் மீதும் தேசத்தின் மீதும் உண்மையான பக்தியும் மன வுருக்கமு முடையவர்களாயும், குடிப்பழக்கம் முதலிய துர்ச்செய்கைகளின்றி நல்லொழுக்க முடையவர்களாயும், தெய்வசிந்தனை பெரிது முடை யவர்களாயும், சுயநலங் கருதாதவர்களாயும், தேசியமென்னும் போர்வையை மேலே போர்த்துக்கொண்டு உள்ளே சுயநலங் கரு தியவர்களாய் ஜனங்களை வஞ்சித்துப் பொருள் கவராதவர்களாயும், தேசநன்மைக் குழைப்பதில் என்ன கஷ்டம் வந்தாலும் தாங்கிக் கொள்ளும் ஆற்றலுடையவர்களாயும், வீரத்துவம் பொருந்தியவர்க ளாயும், தேசியப்பாடல்களைத் தங்கள் மனம் போனபடி குறைத் தும் கூட்டியும் பிழையாக்கியும் விடாமல் பெரியோர்கள் அமைத் துக் கொடுத்தபடியே பாடக்கூடியவர்களாயும் இருக்கவேண்டும். இவைகளோடு அவர்கள், தாங்களே மிக்க கல்வியறிவுடையவர்க ளாய் நல்லவிதத்தில் பாடல் இயற்றக்கூடியவர்களா யிருப்பின் மிகவும் நல்லது.

ஆங்காங்கே பஜனைக்கூடங்க ளமைத்துச் சுபவாரங்களில் தெய்வ உருவப்படங்களையும், தேசபக்தர்களின் படங்களையும், பாரதமாதாவின் படத்தையும் வைத்துப் பூஜித்து முதலில் தெய்வ ஸ்தோத்திரங்களைப் பாடிவிட்டுப் பின்னர்த் தேசிய கீதங்களைப் பாடவேண்டும். ஒவ்வொரு தேசபக்தரும் பிறந்த தினத்தன்று அவர்களுடைய துதியைப் பாடவேண்டும். விரததினங்களிலும் தேசியப் பாடல்களைப் பாடவேண்டும். கலியாணம் முதலிய சுப காரியங்கள் நடக்குங்காலத்தில் அவற்றிற்கென ஒருநேரத்தை ஏற் படுத்திக்கொண்டு பாடவேண்டும். பிரசங்க மேடைகளிலும், பொதுக்கூட்டங்களிலும் கூட்டத்தின் ஆரம்பத்திலும் முடிவிலும், ஒவ்வொருவருடைய பிரசங்கத்தின் தொடக்கத்திலும் முடிவிலும் பாடவேண்டும். பாட்டுக்கச்சேரிகளில் தேசிய கீதங்களுக்கென ஒருநேரத்தை வகுத்துக்கொண்டு அக்காலத்தில் அவற்றைப் பாட வேண்டும். பொது ஜனங்கள் கேட்கும்பொருட்டு நாடகமேடை களிலோ வேறிடங்களிலோ தனி தேசியப்பாட்டுக் கச்சேரிவைத்து அதில் தேசியப் பாடல்களையே பாடவேண்டும்; தேசப் பொதுநன் மைக்குப் பணம் சேகரித்துக் கொடுக்க விரும்பினால் இத்தகைய தனிக் கச்சேரிகளை வைத்துப் பொதுஜனங்களிடம் பணம் வசூ லித்து முழுவதையும் அத்தருமத்திற்கே கொடுத்துவிடவேண்டும்; அந்நாடக மேடைகளில் நாடக ஆரம்பத்தில் தெய்வ ஸ்தோத்திரம் முடிந்தபின்பும், நாடக முடிவிலும், நாடகம் நடக்கும்போது ஒரு பாகம் முடிந்து மற்றொருபாகம் ஆரம்பிப்பதற்கிடையில் உள்ள

நேரத்திலும் பாடவேண்டும். பள்ளிக்கூடங்களில் பாடம் ஆரம்பிப்பதற்கு முன்னும், பாடம் முடிந்து பிள்ளைகள் வீட்டிற்குப் புறப்படும் சமயத்திலும் பாடும்படி செய்தல் வேண்டும்.

இன்னும் தேசிய கீதங்களைப் பாடும்போது பக்க வாத்தியங்களைச் சிறிது அடக்கிக்கொண்டு ஒவ்வொரு வார்த்தையும் தெளிவாக ஜனங்களின் செவிகளில் கேட்கும்படி சப்ததோஷம் சிறிதுமின்றிச் சுத்தமாகப் பாடவேண்டும். கேட்போர் மனமும் கண்ணும் உருக, பாடுவோரும் மனமுருகிக் கண்ணீர் மல்கப் பாடவேண்டும். இந்த முறைகளை அனுசரித்துப் பாடுவதும், கேட்பதுமே பொருத்த முடையனவாம்; இவற்றிற்கு விரோதமாகப் பாடுவதும் கேட்பதும் மிகுந்த பாவச் செயல்களாகும். குற்றமுடைய பாடல்களைப் பொருந்தாத நேரங்களில் பாடுவதாலும், கேட்பதாலும் மிக்க தோஷமுண்டாகுமென்று பாட்டியல் முதலிய நூல்கள் கூறுகின்றன.

தேசீய கீதங்களைப் பாடவேண்டிய கிரமங்கள் இவ்வாறிருந்தும், அந்தோ! இக்காலத்தில் பலர் அந்த முறைகளை உணர்ந்து கொள்ளாமல் தங்கள் மனம் போனபடி ஒழுங்கீனமான முறைகளில் தேசீயப் பாடல்களைப் பாடிப் பெரியோர்களின் மதிப்பையும், தமிழின் உயர்வையும், சங்கீதத்தின் இனிமையையும் கெடுத்து வருகின்றார்கள். தமிழிலும், தமிழ்ச் செய்யுள் இலக்கணத்திலும், சங்கீதத்திலும் தேர்ச்சியில்லாத சிலர் இக்காலத்தில் தான்தோன்றிகளாய் அருள்வாக்கிகளென்றும், ஓதாதுணர்ந்த மேதாவிகளென்றும் வெளிப்பட்டு ஆங்காங்கே நாடக உபாத்தியாயர்களாய் விளங்கி வருகின்றார்கள். இவர்கள் எண்ணிறந்த நாடகப் பாடல்களை எழுதி எங்கும் பரப்புவதுடன் நூற்றுக்கணக்கான தேசீயப் பாடல்களையும் எழுதி வெளியிடுகின்றார்கள். அப்பாடல்களோ, எதுகை மோனை யின்றியும், பொருட் பொருத்தமின்றியும் இருக்கின்றன; அவற்றில் எடுத்துக்கொண்ட விஷயத்திற்குச் சிறிதும் பொருத்தமில்லாத வார்த்தைகளெல்லாம் நிரம்பப் பெற்றிருக்கின்றன; வாக்கியத் தொடர்கள் ஒன்றுக்கொன்று சம்பந்தமின்றிப் பித்தங்கொண்டவன் பேச்சைப்போல் அமைந்திருக்கின்றன. பதங்களில் மொழிக்கு முதலில் வாராத எழுத்துக்களெல்லாம் மொழிக்கு முதலிலும், ரகரத்துக்கு றகரமும், லகரத்துக்கு ளகரமும், னகரத்துக்கு ணகரமும், ழகரத்துக்கு லகரமும் எழுதப்பட்டிருக்கின்றன; சந்த இனிமையோ சிறிதுமில்லை; அரைமாத்திரை அமைய வேண்டிய இடத்தில் ஐந்துமாத்திரையும், ஐந்து மாத்திரை அமைய வேண்டிய இடத்தில் அரை மாத்திரையும் அமைந்திருக்கின்றன.

இக்காலத்தில் கிளம்பியிருக்கும் நாடக ஆக்டர்களாகிய ஆண் மக்களிலும், பெண் மக்களிலும் பெரும்பான்மையோர் கல்வியறி

யில்லாதவர்களாகவே யிருப்பதால் அவர்களுக்கு மேற்கூறிய ஒதா துணர்ந்த மேதாவிகளாகிய தான்தோன்றி அருள் வாக்கிகளே பெரிய பிரகஸ்பதிகளாகத் தோன்றுகிறார்கள்; முறையாகக் கற்ற பெரும் புலவர்களெல்லாம் படித்தவர்களாகத் தோன்றுவதில்லை. உண்மைப் புலவர்களுக்கு நாடகப் பாட்டுக்கள் பாடுவது தெரியா தென்பதும், அப்படி அவர்கள் பாடினாலும் நாடக மேடையில் அவர்களுடைய பாட்டு எடுக்காதென்பதும் அந்த ஆக்டர்களுடைய தீர்மானம். இவ்வகைத் தீர்மானத்தால் அந்த ஆக்டர்கள மேற் கூறிய தான்தோன்றிகளின் ஆபாசப் பாடல்களையே மிகுதியாக எங்கும் பாடிப் பொது ஜனங்களில் பாமரக் கூட்டத்தா ரெல் லோரும் அவற்றையே மதித்துக் கொண்டாடவும், உயர்ந்த கல்வி மான்களால் இயற்றப்பட்ட பாடல்களை எவரேனும் அருமை யாகப் பாடிவிட்டால் அவமதிக்கவும் செய்து வருகிறார்கள். சுமார் இருபது இருபத்தைந்து வருடங்களுக்குமுன் திருவாளர். உடுமலைப் பேட்டை முத்துச்சாமிக் கவிராயர் அவர்களாலும், திருவாளர். சங்கரதாஸ் அவர்களாலும், திருவாளர். சந்தான கிருஷ்ணநாயுடு அவர்களாலும், திருவாளர். நாராயணசாமி பிள்ளை அவர்களாலும் நாடகப் பாடல்களை நல்ல முறையில் பாடும் வழக்கம் அமைந் திருந்தது; அதற்குப் பின்புதான் இவ்வாறு இழுக்குடைய பாடல் களைப் பாடும் வழக்கம் எங்கும் பரவி வருகிறது.

இப்படி நாடக ஆக்டர்கள் வழுப்பாடல்களைப் பாடி வருவ தில், இக்காலத்தில் எங்கும் தேசீயம் பரவி, நம்நாட்டு மக்களியா வரும் தேச பக்தியில் ஈடுபட்டிருப்பதால், தேசீயப் பாடல்களை அதிமாகப் பாடினால் பொது ஜனங்களின் அபிமானத்தை மிகுதி யும் பெறலாமென்று, மேற்கூறியபடி குற்றமலிந்தனவாக இயற்றப் பட்டிருக்கும் தேசீயப் பாடல்களை, நாடகம் நடக்கும்போது இடைக்கிடையே நினைத்த போதெல்லாம் பாடிவரத் தலைப்பட் டிருக்கிறார்கள். அதனால் அவர்களைத் தேச பக்தியுள்ள ஜனங்கள் கரகோஷம் செய்து கொண்டாடி வருகிறார்கள். இவ்வாறு கொண் டாடத் தலைப்படவே, நாடகத்தில் நன்மதிப்புப் பெறாத ஆக்டர் களுங்கூட நான்கைந்து தேசீயப் பாடல்களைப் பாடம் பண்ணிக் கொண்டு நாடக மேடைகளில் பாடி ஜனங்களின் கைப்புடை வாங்கிக் கொண்டு நன்மதிப்புப் பெற்று வருகிறார்கள். இங்ஙனம் தேசீயப் பாடல்களுக்கு மதிப்பேற ஏற நாடகங்கள் முழுவதும் தேசீயப் பாடல்களின் மயமாகவே மாறி விட்டன. நாடகம் நடக் கும்போது நாடகப் பாடல் ஒன்றும் தேசீயப்பாடல் ஒன்றுமாகக் கலந்து, நாடகச் சார்புமின்றித் தேசீயப் பாடல் சார்புமின்றிக் கதம்பப்பாடல்கள் பாடப்பட்டு வருகின்றன. பொது ஜனங்கள் மிகுதியும் தேசபக்தியில் ஈடுபட்டிருப்பதால், பாடல்களின் கலப்பு முறையையோ, நாடகச் சீர் கேட்டையோ, தேசீயப்பாடல்களின்

சீர்கேட்டையோ சிறிதும் கவனியாமல், தேசீயப் பாட்டைக் கேட்கிறோம் என்ற ஒருவகைத் திருப்தியை மாத்திரம் அடைந்து, தேசீயப் பாடல்கள் பாடப்படும் போதெல்லாம் கர கோஷம் செய்து வருகின்றனர்.

பொது ஜனங்களின் இத்தகைய அபிமானத்தைக்கண்ட சில நாடக ஆக்டர்கள் தேசீயகீதங்கள் பாடுவதில் கொஞ்சம் பிரயாசைப்பட்டுப் பேரெடுத்து விட்டால் மிகுந்த கீர்த்தியும், பொருளும் சம்பாதிக்கலாமென்று கருதி மேற்கூறிய வழுப்பாட்டுக்களில் மற்றவர்களைக் காட்டினும் அதிகமான பாடல்களைப் பாடம் பண்ணிக்கொண்டு தேசீய உடைகளுடன் நாடக மேடைகளில் வந்து கைகால்களை நீட்டியும், முகத்தை வளைத்தும், உதட்டைக் கடித்தும், மீசையை முறுக்கியும், தொண்டையைப் பலவித விகாரங்களாக உருட்டியும், புரட்டியும், சுழற்றியும், வார்த்தைகளை மென்றும் தின்றும், எழுத்தெழுத்தாகப் பிரித்தும் அருத்தமொன்றும் விளங்காதபடி ஆடம்பரமாகப் பாடுகிறார்கள். அவர்கள் தேசீயப் பாட்டுப் பாடுவதில் சிறந்தவர்கள் என்று அவர்களுக்குப் பேருண்டாய் விடுகிறது.

அதன்மேல் நாடகத்தில் பணம் சம்பாதிக்க விரும்பும் நாடக கண்டிராக்டர்களும், கொட்டகைக்காரர்களும் அவர்களுக்கு அதிக சம்பளம் கொடுப்பதாகச் சொல்லி மிகுந்த கௌரவத்துடன் அவர்களை அழைத்துவந்து, நாடகத்தில் தேசீயப் பாட்டு வெகு விமரிசையாகப் பாடப்படு மென்று இடம்பமாக விளம்பரம் செய்து நாடகம் வைக்கிறார்கள். தேசீயப் பாடல்களின் விருப்பத்தால் ஜனங்கள் ஏராளமாகக் கூடிவிடுகிறார்கள். பணம் இரண்டாயிரம் மூவாயிரம் வசூலாகிவிடுகிறது; மேற்கூடிய ஆக்டர்கள் கண் தெரியாமல் குடித்துவிட்டுத் தலையாட்டத்துடன் வந்து முன்னுரைத்தவாறு தேசீயப் பாடலைப் பாடுகிறார்கள். அவர்கள் வார்த்தைகளை மென்றுவிட்டுப் பலவித விகாரங்களோடு பாடுவதால் சமீபத்திலிருப்பவர்களுக்கும் பாட்டில் இன்னது இருக்கிறதென்பது கேட்பதில்லை. சில வார்த்தைகள் கேட்டாலும் வழுக்கள் நிறைந்தனவாகவும், பொருந்தாப் பொருள்கள் அமைந்தனவாகவுமிருக்கின்றன. ஜனங்கள் தேசபக்தியில் பிரமை கொண்டவர்களாதலால், இத்தோஷங்களைச் சிறிதும் கருதாமல் அப்பாட்டில் எங்கேனும் தேச பக்தரின் பெயர் கேட்டபோதும், உருக்கமான ஏதேனுமொரு வார்த்தை கேட்டபோதும் பேரானந்தக் கடலில் மூழ்கிக் கர கோஷம் செய்கிறார்கள். சிலர் தங்கள் தங்களுக்கு விருப்பமான பாடல்களைப் பாடவேண்டுமென்று அந்த ஆக்டரிடம் சொல்லிக் கூவுகிறார்கள்; பலர் தங்கள் தங்களுக்கு வேண்டிய பாடல்களைப் பாடும்படி ஓயாமல் அந்த ஆக்டருக்குச் சீட்டெழுதியனுப்புகிறார்கள்; ஆக்டர்கள் எதைப் பாடலாமென்று ஒன்றும்

தோன்றுமல் விழித்துக்கொண்டு நிற்கிறுர்கள்; அத்தருணத்தில் ஆக்டர்களை அழைத்துவந்த அபிமானிகள் படுதாக்களின் பக்கங் களில் நின்றுகொண்டு 'ஒன்றும் பாடவேண்டாம்; வந்துவிடுங்கள்' என்று கைகாட்டிக் கூப்பிடுகிறுர்கள். ஆக்டர்கள் உள்ளே போகச் சிறிது நகர்கிறுர்கள். அதைக்கண்டு ஜனங்கள், 'போகாதே; நின்று பாடு' என்று கைதட்டிக் கூச்சலிடுகிறுர்கள்; ஆக்டர்கள் திரும்பி வந்து சில பாடல்களைப் பாடுகிறுர்கள். பொது ஜனங்களில் சிலர், அந்த ஆக்டர்களுக்குப் பூமாலை சூட்டுகிறுர்கள்; சிலர் பணம் இனும் கொடுக்கிறுர்கள்; சில பெரிய மனிதர்கள் மெடல் போடுகிறுர்கள். சிலர் மேடைமேல் ஏறிநின்று அந்த ஆக்டர்களைப் பற்றி நீண்ட தோர் பிரசங்கம் புரிந்து விடுகிறுர்கள். வைத்த நாடகத்தில் சில சீன்கள் கூட நடைபெறுவதில்லை; சில பாடல்கள் கூடப் பாடப் படுவதில்லை. இத்தகைய ஆர்பாட்டங்களுடன் அந்த அறைகுறை நாடகம் முடிவடைகிறது. மறுநாள் அந்த ஆக்டர்களைப் பற்றி அவர்களைச் சார்ந்த அபிமானிகளால் புகழ்ந்தெழுதப்படும் வியா சங்கள் பல பத்திரிகைகளில் வெளிவந்து விடுகின்றன.

அதன்மேல், அடுத்ததினம், 'இன்று நடக்கும் நாடக வசூல்' தேச நன்மைக்கான ஒரு காரியத்திற்கு அளிக்கப்படும்' என்று விளம்பரம்செய்து நாடகம் வைக்கப்படுகிறது. அன்று அதிக ஜனக்கூட்டமும், அதிக வசூலும் ஆகின்றன. நாடகக் கூட்டத்தார் தாங்கள் தெரிவித்தபடியே வசூலில் செலவுபோக மீதியை அத் தருமத்திற்குக் கொடுத்துவிட்டு அவ்விவரத்தைப் பத்திரிகையில் வெளிப்படுத்தி விடுகிறுர்கள். ஜனங்கள் மேன்மேலும் கூடித் தங் களுக்கு வரும்படி அதிகமாவதற்கே இத்தகை தருமத்தைச் செய்து தேசபக்தியைக் காட்டுகிறுர்கள். அதனுல் ஜனங்கள் அந்த ஆக்டர் களை மிகுந்த தேசபக்தி யுடையவர்களென்று தினந்தோறும் பெருங் கூட்டமாக நாடகத்திற்குப் போய் அவர்களை ஆதரிக்கிறுர் கள். இவ்வாறு சிலஆட்டங்கள் நடந்து பணம் அதிகமாகச் சேர்ந்த வுடனே பங்குபோடும் விஷயத்தில் ஆக்டர்களுக்கும், கண்டிராக் டர்களுக்கும் தர்க்க முண்டாகி விடுகிறது. அவர்கள் ஒருவரை யொருவர் ஏமாற்றப் பார்க்கிறுர்கள். அதனுல் சச்சரவு அதிகமாகி றது; மத்தியில் நாடகம் நின்று விடுகிறது. அதுவரை அவர்களை அபிமானித்துவந்த பொது ஜனங்கள் அவர்களுடைய வஞ்சகச் செயல்களை யுணர்ந்து நாடகமேடையிலேறிப் பெருங் கலகம்விளைக் கின்றனர். அடிதடிகளோடு கூட்டம் கலேகிறது. மறுநாள் நடிப் புத் தேசபக்த ஆக்டர்கள் கண்ணுக்கு அகப்படாமல் போய் விடு கிறுர்கள்.

தற்காலத்தில் தேசியப் பாடல்கள் பாடும்முறையானது இவ் வித நிலைமையில் இருக்கிறது. நாம் இங்கு எழுதியவைகளைக் கொண்டு தேசீய கீதங்கள் பாடுவதையும், கேட்பதையும் கண்டிப்ப

தாக நண்பர்கள் நினைக்கக் கூடாது. மற்றவர்களுக்குள்ள பக்தியைக் காட்டினும் நூறு மடங்கதிகமான பக்தி அவ்விஷயங்களில் நமக்குண்டு. நாம் இங்குக் கண்டிப்பதெல்லாம், அப்பாடல்கள் முறைபிறழ்ந்து பாடப்படுவதைப் பற்றியும், சில நடிப்புக்காரர்கள் அதன் வாயிலாகப் பொது ஜனங்களை ஏமாற்றிப் பொருள் கவர்வதைப் பற்றியும், தமிழும் நாடகமும் கெடுவதைப் பற்றியுமே. உண்மையான தேச பக்தர்கள் பணம் வாங்காமலே பொது ஜனங்களுக்கிடையில் அக்கீதங்களைப் பாடுவார்கள்; பாடிப் பணம் வசூல் செய்தாலும் அதில் தங்கள் ஜீவனத்துக்கு வேண்டியதை மாத்திரம் எடுத்துக்கொண்டு மீதியைப் பொது நல காரியத்திற்கு உபயோகப் படுத்துவார்கள். மேலே நாம் கூறிய விதிகளை அனுசரித்தே தேசீயப் பாடல்களைப் பாடுவார்கள். இந்த நடிப்புக்காரர் இதன் மூலம் கவரும் பணமோ குடி முதலிய அகிருத்தியங்களுக்கு உபயோகப் படுகின்றது.

இவர்களுடைய செய்கையால் உண்மைத் தேசபக்தி யில்லாமற் போகின்றது; நடிப்புத் தேசபக்தி பரவுகின்றது; தேசாபிமானிகளின் சிறப்பும் குறைகின்றது; தமிழின் இயற்கை கெடுகின்றது; நாடகத்தின் இயல் அடியோடொழிகின்றது. இவர்களால் இவ்வளவு கெடுதிகள் நேர்ந்துவரினும் இவற்றைத் தடுப்பாரில்லை; கவனிப்பாருமில்லை. சில அறிஞர் இக்குற்றங்களைக் கவனித்துச்சொன்னாலும், பொது ஜனங்களிற் பெரும்பான்மையோர் தேசபக்தி ஒன்றை மாத்திரமே விரும்பி, அவ்வழுப்பாடல்களைப் பாடுவோரையும் அபிமானித்திருப்பதாலும், தங்களுக்குத் தமிழ் இலக்கணத்திலும் நாடக இலக்கணத்திலும் தேர்ச்சியில்லாததாலும், அக்குற்றங்கள் குற்றங்களாகத் தோன்றாமல் சரியாகவே தோன்றி, அவ்வாறு குற்றங்கூறிய அறிஞரோடு சண்டை தொடுத்து அவர்கள் வாயை அடக்கி விடுகின்றனர்.

இவ்வாறே இன்னும், கல்வி, கைத்தொழில் முதலிய பலவகைகளிலும் கொண்டாடத்தக்கவை அவமதிக்கப்பட்டும், கொண்டாடத்தகாதன கொண்டாடப்பட்டும் வருகின்றன. இத்தகைய போலிச் செயல்களை எல்லோரும் கொண்டாடி உயர்த்தி வருகின்றார்களே யொழியக் கண்டித்து நீக்குவாரே இல்லை. அதனால் இத்தகைய செயல்கள் நாளுக்குநாள் விருத்தியாகிக்கொண்டே போகின்றன. இப்பேர்ப்பட்ட தோஷங்களை நீக்கி எல்லா வகைகளிலும் நல்ல முறைகளை அமைக்கப் பல அறிஞர்கள் கூடிப் பெரு முயற்சியெடுக்கவேண்டும். இனிமேலாவது தேசீயப் பாடல்களை இத்தகை ஆபாச முறையிற் பாடுவதை நீக்கி நல்ல முறையிற் பாடும்படி செய்யவேண்டும். அவ்வாறு செய்தால் மாத்திரமே நம்நாடு சிறந்து விளங்கும்.

ஓம் தத் ஸத்.




## ஸ்ரீ கோபால கிருஷ்ண கோகலே.

(250-ம் பக்கத் தொடர்ச்சி.)

### 5. எங்கும் சொன்மாரி.

ஆங்கில நாட்டில் ஸ்ரீகோகலே சாக்ஷியஞ் கூறிய பின்னர் பல இடங்களிலும் உள்ளவர் இவரை வரவேற்று உபந்நியசிக்க வேண்டினர். ஒவ்வொரு நகரத்தாரும் இவரை வரவேற்று உபசரித்து விருந்தளித்தனர். அவர் ஆங்காங்கு இந்திய விஷயமாகப் பல சொற்பொழிவுகள் நிகழ்த்தி வந்தனர். அவற்றில், இந்திய அறிவாளிகள் பல வழிகளிலும் தலையெடாதபடி அடக்கப்படுதலையும், கைத்தொழி லபிவிருத்தியில் மக்களை அரசாங்கத்தார் ஊக்காதிருந்த குறையையும், 'பிளேக்' என்ற 'எலி விழுநோய்' பம்பாய் மாகாணங்களிற் பரவுங்கால் இந்தியப் போர்வீரர்கள் மக்களுக்கு உதவிசெய்வதாக நடித்து, அவர்களைத் துன்புறுத்தி அவர்களுடைய பொருளைக் கொள்ளை கொண்ட அநீதியையும், அவர் சிறிதும் அச்சமின்றிப் பகிரங்கமாக எடுத்துணர்த்தினர். இதனால் இவர் கூறுவது மெய்யென்றுணராத சிலர் இவரை நிந்திக்கநேர்ந்தது. ஆனாலும் உண்மையை உள்ளவாறெடுத்துக் கூறுவதில் ஸ்ரீ கோகலே சிறிதும் அஞ்சினாரில்லை.

இவர் இந்தியாவுக்குத் திரும்பிவந்ததும், இவருடைய சொற்பொழிவுகள் குற்றமுள்ளவை யெனப் பம்பாய் மாகாண அரசாங்கத்தார் இவரை வாதுக்கிழுத்தனர். பயந்த சுபாவமுள்ள அக்காலத்தலைவரிற் சிலர் அதற்கு உட்கையாயிருந்தும், சிலர் இவரைச் சார்ந்து தர்க்கிப்பதற்கு அஞ்சியும் வாளாவிருந்தமையால் ஸ்ரீ கோகலே துரைத்தனத்தாரை மன்னிப்புக் கேட்டலைத்தவிர அவருக்கு வேறு வழியில்லாமற் போயிற்று.

சில ஆண்டுகளுக்குப் பின்னர் இவர் பம்பாய் சட்டசபைக்கு அங்கத்தினராகத் தேர்ந்தெடுக்கப் பெற்றார். 1902-ம் ஆண்டில் இவர் புனா பர்கூஸன் கலாசாலைத் தலைமையாசிரியர் (Principal) பதவியினின்றும் மாதம் இருபத்தைந்து ரூபாய் உபகாரச் சம்பளத்துடன் நீங்கி, பம்பாய் உயர்தர சட்டசபை (Superior Legislative Council) க்கு பிரோஸிஷா மேதா என்பவரின் ஸ்தானத்தில் தேர்ந்தெடுக்கப் பெற்றார்.

### 6. விவேக போதம்.

இங்கிலேயே இவருடைய போற்றலை விளக்கும் பெருமைக் காதாரமாயுள்ளது. 'அரசாங்க வரவு செலவு திட்டம்' என்ற விஷயத்தைப் பொது

ஜனங்களுக்கு, மூடனும் உணரும் வகையில் எடுத்துக்காட்டி உணர்ச்சியளித்தவர் இவரே. இவர் பேசு மிடங்களிலெல்லாம் செலவு திட்ட விஷயமே சிறந்து நின்றது. வாய்க்கணக்கால் இவர் வரவு செலவின் விஷயங்களை வாய்ப்பக்கூறி அவற்றிற்குச் சீர்திருத்தம் வேண்டியது அவசியமெனச் சித்தாந்தப்படுத்துவார். இதனால் தேசத்தில் ஓர் எழுச்சி ஏற்பட்டது. இராஜீய நடவடிக்கைகளைத் தக்கமுறையில் மாற்றவேண்டுமென்று இவர் கூறியதைப் புகழாதார் இலர். வருஷா வருஷம் வரியதிகரிப்பதையும், அதனால் தேசநலஞ் சிறிதும் பெருகாதிருப்பதையும் இவர் கண்டித்துப் பேசினர். இந்தியர்களுக்கே உத்தியோகங்கள் கொடுக்கவேண்டுமென்றும், படைச்செலவு, ஆங்கிலேய அதிகாரிகளின் அதிகச்சம்பளம், லாகிரி வரிகள் ஆகிய இவற்றைக் குறைத்து, விவசாய அபிவிருத்தி, கைத்தொழிற் கல்விப்பெருக்கு, கட்டாய இலவச ஆரம்பப்படிப்பு முதலியவற்றிற்காக அப்பணத்தைச் செலவிடவேண்டுமென்றுங் கூறினர். செலவு திட்டத்தைக் கணக்குப்படி செய்ய ஏற்றவகையில் பொருத்திக் காட்டினர். அதனால் இவரது புகழ் ஓங்கிற்று. ஆனாலும், இவருடைய சீர்திருத்தங்களெல்லாம் அக்காலத்திய அரசாங்க நிர்வாகிகளால் ஏற்கப்படவில்லை. கனந்தங்கிய இராஜப்பிரதிநிதி கர்சன் அவர்கள் பலதடவை தர்க்கித்தும் கோகலேயின் நோக்கங்களே தலை சிறந்து நின்றன. சர்வகலாசாலை வித்யாபிவிருத்தி விஷயமாய் சில சீர்திருத்தங்களைக் கோகலே நிறைவேற்றிக் கலைமகளுக்குத் தமது தொண்டையியற்றினர். அரசாங்க அந்தரங்க திட்டத்தை (Official Secrets Bill) யும் இவர் எதிர்த்தார்.

## 7. உண்மைக்கே ஓயாத புகழ்.

ஸ்ரீ கோகலே, சட்டசபையில் நிறைவேறியும், நிறைவேறவு மிருக்கும் ஒவ்வொரு சட்டதிட்டத்தையும் ஊடுருவிப் பார்த்து அவற்றிலுள்ள பதார்த்தங்களைப் பக்குவமாக மாற்ற மனங்கொள்வார். அச்சட்டம் நிறைவேறுவதால் நேரவிருக்கும் சாதகபாதகங்களைச் சரியாகத், தர்க்கமுறையில் நிர்ணயித்துப் பேசுவார். இராஜப்பிரதிநிதி இவருடைய புத்தி நுட்பத்தையுந் திட்பத்தையுங் கண்டு வியந்து "இவரிடத்தில் தெய்வீகத்தன்மை தோன்றுகிறது" என்று வாய்விட்டுப் புகழ்வார். ஐரோப்பிய உத்தியோகஸ்தர்களுங்கூட கோகலேயைமட்டும் புகழ்ந்து அவரைச் சத்தியசந்தன் என்றும் போற்றுவர். 'கோகலேயுடன் பேசுவதற்கே நான் இச்சைகொள்ளுகிறேன். இத்துணைச் சிறந்த அறிவாளியை நான் எங்கணுங் கண்டதில்லை' என்று கூறி, இவர் அரசாங்கத்தை எதிர்த்துப் போராடி வந்ததையும் பொருட் படுத்தாது அரசப்பிரதிநிதி இவருக்கு இந்தியநாட்டியல் வீரர் [C. I. E] என்ற பட்டமளித்தனரென்னில் இவருடைய உண்மைக்கேயுள்ள ஓயாத புகழை உரைக்க வல்லார் யாரே.

## 8. காங்கிரஸ் தொண்டே காட்டுநேல் வீடு.

'காங்கிரஸ் எழுவாயே காட்டுந் தேசப்பயனிலையை' என்பது ஸ்ரீ கோகலேயின் சித்தாந்தம். இவர் காங்கிரஸில் சேர்ந்து அதன் வளர்ச்சிக்குப் பெரிய காரணபூதரா யிலங்கினர். 1904-ல் பம்பாயில் நடந்த காங்கிரஸில் அமிதச்செலவு என்பது பொருளாக கோகலே ஓர் சொற்பொழிவு நிகழ்த்தினர். இதைக்கேட்ட பல ஐரோப்பியர் இவரைச் சீமைப்பாராளுமன்றச் சொற்பொழிவாளரெனப் போற்று நின்றனர். 1905-ல் பம்பாய் மாகாணப் பொது ஜனங்கள் 'இந்தியாவின் ராஜீய நிலையை' எடுத்துக்கூற இவரைத் தங்கள் பிரதிநிதியாகத் தேர்ந்தெடுத்துச் சீமைக் கனுப்பினர். இவர் அங்கு

ஐம்பதுநாட்கள் தங்கி அரிய அநேக பிரசங்கங்கள் செய்து திரும்பினர். 'இந்தியாவின் இராஜரீக நிலையை இப்பொழுதுதான் நாங்கள் உண்மையாக அறிந்தோம். இதுவரையில் இத்துணை விளக்கமாக எங்களுக்கு எவரும் எடுத்தோதியதில்லை.' என்றனர் ஐரோப்பிய இராஜதந்திரிகள் பலர். ஸ்ரீ கோகலே மேல்நாட்டிலிருந்து திரும்பியதும், 1905-ல் காசிமா க்ஷேத்திரத்தில் நடந்த 21-ம் அகில இந்திய காங்கிரசுக்கு அக்கிராசனம் வகித்தார். சீமையில் அதிக தீவிரமாகப் பேசியதால் ஸ்ரீ கோபால கிருஷ்ணருக்குத் தொண்டையில் ஓர் புண்தோன்றி அவரைப் புண்படுத்தியது. ஆயினும், தாயன்பு ஆற்றலருள, இனியவை மிகப்பேசி, அச்சபையை அலங்கரித்தார் கோகலே.

## 9. காங்கிரஸ் தலைமை.

வாரணாசி நகரத்தில் அகில இந்திய காங்கிரஸ் மகாசபையின் 21-வது மகாநாடு 1905-ம் ஆண்டு டிசம்பரில் கூடிற்று. அதற்கு கோகலே தலைமை வகித்தார். ஸ்ரீ கோகலே அக்கிராசனர் விரிவுரையில் தாமிதுவரை செய்து வந்த ஊழியத்தையும், இனிச் செய்தற்குரிய சிறந்த கைங்கரியத்தையும் விளக்கிக்கூறி, அரசாங்கத்தாரிடத்தில் அடிக்கடி தமது தாய் நாட்டின் குறைகளை எடுத்துரைத்து, அவற்றிற்கு விமோசனம் தேடுதல் அவசியமென்பதைச் சிறு குழந்தையும் இது கானமோவென்று இன்புற்றுக் கேட்கும் வகையில், எளிய நடையில், இனிய குரலிலெடுத்துப் புகன்றார். நம்மில் பலர் நம்முடைய தேசத்தொண்டிற்கே தமது உடல் பொருளாவி மூன்றையும் தியாகம் செய்து, தேசத்தொண்டே சிறந்ததென வெளிவரவேண்டுமென்று கூறினர்; கொள்கை பேதத்திற்காகவும், போலிப் புகழுக்காகவும், காங்கிரஸினின்று பலர் விலகிக்கொள்வதை இவர் கண்டித்தும், காங்கிரசுக்குள்ளேயே, பெரும்பான்மையோரின் அபிப்பிராயத்தைத் தழுவிச் செல்லவேண்டுமென்றும் வற்புறுத்தினர்.

## 10. சில அரிய தோற்றங்கள்.

இவர் முடுக்காகப் பேசின காலங்களெல்லாம் அந்தோ! விரைந்தேகின. வந்தது! வந்தது! மூப்பு. கோபாலக் கண்ணர் கோற்கண்ண ராயினர். ஆடிப்பாடித் தாயின் பெருமைக் குழைத்தகாலம் போய் அவர் தெருத் திண்ணையிலூட்கார்ந்து வேதாந்தம் பேசும் அந்திய (வயோதிக) காலம் ஆதிக்கம் பெறுவதாயிற்று. புனாவிலிருந்துகொண்டு 'தயன் பிரகாஸம்' என்ற ஓர்வார மராத்திய மலரை விரித்தார். அதன் மணம் மகராட்டிரதேசத்தின் மாண்மியத்தைப் பெருக்கிற்று.

கோகலே அலறிப்பேச அறியாதவர். அவருடைய சொற்பெருக்குகள் யாழிடைப்பிறவா இசையேபோன்று இன்பம் பயந்தவை. அவர் மனமே அவருக்கொரு கோயிலா யிருந்தது. அவர் மனமென்ற பதியில் இந்தியக் கோயிலைக்கட்டி, தாயென்ற தெய்வத்துக்குத் தண் பணியாற்றி, தேவர்களிடத்தில் தம் பெருங் குறையை யெடுத்துரைப்பவர்போல் வானுலகம் புக்கு வள்ளலாயினர். அன்புடன் தாய் பணியாற்றின் அத்தாயின் மேன்மை தழைக்குமன்றோ !

ஸ்ரீ லக்ஷ்மீ காந்தன்.

---

### ஓர் பிழை திருத்தம்.

(பிரபவஹு) மார்கழிமீ சஞ்சிகை 248-வது பக்கம் (ஸ்ரீ கோபால கிருஷ்ண கோகலே சரித்திரம்) இவர் பிறந்த வருஷம் 1886 என்று தவறாய் விழுந்திருப்பதை 1866 என்று திருத்திப் படிக்கவும். ப-ர்.






## வேதாந்த சார சங்கிரக வசனம்.

(253-ம் பக்கத் தொடர்ச்சி)

(தேவர்கடன் முனிவர்கடன் பிதிரர்கடன் என்னும் மூன்றுவித கடன்களைத் தீர்க்கவேண்டியது மனிதராகப் பிறந்தோருடைய கடமையாகின்றது. ஆதலின் இம்மூன்று கடன்களைத் தீர்த்த பின்னரே இல்லறத்தார் இல்லறத்தினின்று விடுதலை யடையவேண்டும். அக்கடன்களினின்று விடுதலை யாகாமல் சம்சாரபந்தத்தினின்று விடுதலை யாவதெங்ஙனமெனின்) இம்மூன்று கடன்களினின்று விடுதலை யடைந்தவர்களோ(கடன்களைத் தீர்த்தவர்களோ) கோடிக்கணக்கானவர்களாயிருக்கின்றனர். ஆனால் சம்சாரபாசத்தினின்று விடுதலையடைந்தவனே எவனே ஒரு பிரம்மவித்வரிஷ்டனேயாவன். தவிர ஓர் வீட்டினுள் தம்பத்தில் கட்டப்பட்டிருப்பவனுக்கு தெருக்கதவு திறந்திருந்தால் யாது பயன்? ஒரு பயனுமில்லையன்றோ? அதுபோல, உள்ளேயிருக்கும் சம்சாரபாசபந்தத்தினால் கட்டப்பட்டுள்ளவனுக்குப் புறத்திலுள்ளவைகளாகிய தேவ ரிஷி பித்ரு ருணங்களாகிய பாசத்தினின்று விடுதலை யடைவதால் மாத்திரம் பயன் யாது? ஆகையால் பண்டிதர்கள் சம்சாரபந்தத்தினின்று விடுதலை யடையவே முயற்சிசெய்யவேண்டும்.

(மோக்ஷத்தை யடையவேண்டுமெனும் இச்சைமட்டுமிருந்தால் போதாதோவெனின்) தீவிரமான மோக்ஷாபேக்ஷை (முமுக்ஷுத்வம்) எவ்வாறிருக்குமெனின், சிரவணம் மனனம் நிதித்தியாசனங்களைத் தீவிரமாயுடையதே தீவிர முமுக்ஷுத்வமாகும். அவ்வாறின்றி (சிரவணமனனாதிகளைச் செய்யாமல்) சும்மா எனக்கும் மோக்ஷத்தை! யடையவேண்டுமென்று மிகுந்த அபேக்ஷையிருக்கிறது என்று சொல்லிக்கொண்டிருப்பது வெறும் வாய்ப்பேச்சேயன்றி அதனால் வேறொரு பயனுமில்லை. பதிவிரதாஸ்திரீயானவள் தன் கணவன் மரித்தவுடன் வீடு முதலிய சகல பதார்த்தங்களையும் அற்பமாயெண்ணிக் கைவிட்டுப் பரலோக சுகாபேக்ஷையால் தன் கணவனுடன் அக்கினியிற் பிரவேசிக்க எவ்வளவு துணிவும் திடமுமுள்ளவளாக விருக்கின்றாளோ அவ்வளவு துணிவும் திடமும் முமுக்ஷுவிற்கும் அத்தியாவசியமாகும். அப்பொழுதுதான் அவனுக்கு மோக்ஷபலப் பிராப்தி யுண்டாகும்.

(இத்தகைய திடபாவ முண்டாவதெப்படியென்பது கூறப்படுகின்றது.) பிரம்மம் ஒன்றே நித்தியப் பொருள்: மற்ற உலகமும் அதிலுள்ள சகல பொருள்களும் அநித்தியமே யென்னும் (நித்தியாநித்திய வஸ்து) விவேகத்தால் தேகமானது அடுத்த நிமிஷத்தில் அழிந்துபோகக்கூடியது; (இன்

றைக்கிருப்பாரை நாளைக்கிருப்பரென் றெண்ணவோ திடமில்லை. புல் நுனி மேல் நீர்போல் நிலையாமையை யுடையது. நெருநலுளனொருவன் இன்றில்லையென்னும் பெருமையுடைத் திவ்வுலகு. மாலை கிடந்தா னெழுதலரிது) நிலைபேறுடையதாகாது. ஆகலின் இது அழியாமலிருக்குமென்று நம்பலாகாது என்னும் எண்ணம் தோன்றும். அதனால் மரணபயம் உண்டாகும். அதனால் பரிதாபம் தோன்றும். அதனால் மோக்ஷத்தை யடையவேண்டும் என்னும் அவசரமும் உண்டாகும். எவன் நித்யாநித்ய வஸ்து விவேகமென்னும் சிரத்தை (தலையை)யும் தீவிர வைராக்யமென்னும் சரீரத்தையும் சமாதி ஷட்கமென்னும் இருதயம் முதலாகிய ஆறு அங்கங்களையும் முமுக்ஷுத்வமென்னும் பிராணனையும் உடையவனாய் (இவ்விதமான அவயவங்களாகிய கருவிகளை யுடையவனாய்) ஞானேச்சை யுடையவனும் யோகியுமான சூரனாகவிருக்கிறானோ அவன் அபரோக்ஷ ஞானமென்னும் கட்கத்தினால் மிருத்துவைத் தப்பாமல் கொல்லுகிறான். (ஜனன மரணங்களைக் கடக்கிறான்.)

மேற்கூறிய சாதனசம்பத்திகளையுடைய, ஞானாபேக்ஷையுடைய ஜிஞ்ஞாசுவானவன் ஆத்மஸ்வரூபத்தை அறியும் பொருட்டு சதாசாரியனைத் தேடியடைதல் வேண்டும்.

## குருவினிலக்கணம்.

வேதாத்தியயனஞ்செய்து அதன்பொருளைச் சந்தேக விபரீதமற வுணர்ந்தவரும், ஜீவப் பிரஹ்ம ஐக்கிய நிச்சயத்தால் ஆத்மஞான நிஷ்டை யுடையவரும், சாந்தி யுடையவரும், சமதிருஷ்டி யுடையவரும், அகங்கார மமகாரங்களற்றவரும், சுகதுக்காதி துவந்துவதோஷங்க ளில்லாதவரும் (சுகம் வந்தபோது சந்தோஷிப்பதும் துக்கத்தில் வருந்துவது மில்லாமல் 'வாழ்வது வந்தபோது மனந்தனில் மகிழவேண்டாம், தாழ்வது வந்ததானால் தளர்வரோ தக்கோர்' என்றபடி சுகதுக்கங்களைச் சமமாகக் கருதுபவரும்) மனைமனைவியாதிகளிடத்தில் அபிமான மில்லாதவரும், அபேக்ஷை யில்லாதவரும், பரிசுத்தமானவரும், சிஷ்யனுக்குண்டாகும் சந்தேகங்களைத் தீர்க்கும் சாமர்த்தியமுள்ளவரும், தம்மைவந்தடுத்த சிஷ்யனுடைய துன்பங்களைத் துடைத்து அவனை உய்விக்கவேண்டுமென்னும் கருணையை மிகுதியுமுடையவருமாக இருப்பவர் எவரோ அவரே ஞானேச்சை யுடையவனுக்குச் சரணமடையத்தக்க சதாசாரியராவர். கடந்த அநேக ஜன்மங்களில் ஒருவன் மிக்க பக்தியுடையவனாய் வேதவிதிப்படி ஆராதித்துவந்த ஈஸ்வரனே பிரத்தியக்ஷமாய் ஞானசம்பத்தியுடைய குருவடிவங் கொண்டுவந்து ஆத்மஸ்வரூபத்தைச் செவ்வையாய் உபதேசித்து பக்தர்களைச் சம்சாரக் கடலினின்று கரையேற்றுகிறார்.

அஞ்ஞானத்தாலுண்டான அகங்காரமாகிற பந்தத்தினின்றும் விடுவிப்பவர் எவரோ அவரே குருவாவர் என்று குரு சப்தத்தின் அர்த்தத்தை யறிந்தவர்கள் கூறியுள்ளார்கள்.

(குரு என்னும் பதத்தில் 'கு' என்பதன் பொருள் 'அந்தகாரம்' (அஞ்ஞானம்) 'ரு' என்பதன் பொருள், 'ஒழிகின்றது' என்பது. எனவே அஞ்ஞானத்தை யொழிக்கின்றவர் குருவாவர் என்பதாயிற்று.)

(இவ்வாறின்றிச் சடை வளர்த்துக்கொண்டும், மொட்டை யடித்துக் கொண்டும், விபூதி நாமம் முதலிய சின்னங்களை யணிந்துகொண்டும் குருத் தன்மையை ஜீவனோபாயமாகக்கொண்டு தக்ஷிணையி னிமித்தம் ஊர் ஊராகத் திரிவோர் குருவாகமாட்டார்.)

சிவனே பிரத்தியக்ஷமாகக் குருவாகவந்துள்ளார். ஆகையால் குருவே சிவன், சிவனே குரு. ஆகவே, முமுக்ஷுவானவன் குரு சிவன் என்னும் இருவரையும் அபேதமாகப் பாவிக்கவேண்டுமேயன்றி சிவன் வேறு குரு வேறு என்றெண்ணலாகாது.

"குருவே சிவமெனக் கூறினன் நந்தி
குருவே சிவமென் பதுகுறித் தோரார்
குருவே சிவமாகிக் கோனுமாய் நிற்கும்
குருவே யுரையுணர் வற்றதோர் கோவே." (திருமந்திரம்)

சம்சாரபந்தத்தைக் கடவாதவன் பிறரைக் கடக்கச்செய்ய அசக்தனாகையின் பந்த முக்தியடைந்தவரும் சமாதிநிஷ்டரும் கிருதார்த்தருமாகிய குருவைத் தேடியடைந்த உத்தம சீடனானவன் அவரைத் தரிசித்து (சைதந்யம் ஸாஸ்வதம் சாந்தம், வியோமாதீதம், நிரஞ்சநம், நாதபிந்துகலாதீதம், தஸ்மை ஸ்ரீ குரவே நம: என்று துதித்து பத்திர புஷ்பங்களால் அருச்சித்து,) அவரருகில் எப்பொழுது மிருந்து சேவை செய்து சமயமறிந்து,

சீடன்:—ஞானவைராக்கிய நிதியே! தயாசாகரரே! பண்டிதர்கள் உம்மை யடைந்து சம்சாரமென்னும் கடலைக் கடந்தார்கள். ஆகையால் தாங்கள் சம்சாரசாகரத்தைக் கடப்பதற்குத் தோணியா யிருக்கின்றீர். தேசிகோத்தமரே! நான் இப்பொழுது தமது கருணைக்குப் பாத்திரனானமையால் நான் பூர்வ ஜன்மங்களில் மிக்க புண்ணியஞ் செய்தவனேன். பிரம்மஞானியினுடைய தரிசனமானது அப்பொழுதே கண்களுக்கு விகாசத்தையும் முகத்திற்குக் காந்தியையும் சித்தத்திற்கு ஆனந்தத்தையும் அளிக்கின்றது. அஞ்ஞானத்தைக் கெடுத்து சுஞ்ஞானத்தைத் தருகின்றது. எத்தனை கோடிக்கணக்கான சந்திரரும் சூரியரும் அக்னிகளும் இருந்தாலும் அவைகளாலும் போக்கமுடியாத இருதயத்திலுள்ள அஞ்ஞானமாகிய அந்தகாரமானது தங்கள் அருட்பார்வை மாத்திரத்தால் நாசமாகின்றதே. இது எவ்வளவு ஆச்சரியம்! நான் கடக்க முடியாததும், ஜனனம் மரணம் வியாதி முதலாகிய துக்கங்களை யுண்டாக்குவதும், மிக்க குரூரமானதும், புத்திர மித்திர களத்திரங்களென்னும் மிருந்த ஜலசரங்களுக்கு இருப்பிடமாகவுள்ளதும் பயங்கரமானதுமாகிய சம்சாரசாகரத்தில் விழுந்து கர்மங்களென்னும் பெரிய அலைகளால் முன்னும் பின்னும் தள்ளப்பட்டு அலைக்கழிக்கப்பட்டவனாய் போக்கு வரவுகளால் பிரமையடைந்து திக்குத்திசை தெரியாமல் கிடக்கிறேன். இந்த நிலைமையிலிருந்தும் ஏதோ சிறிது புண்ணியமிருந்தமையால் தேவரீருடைய பாதகமலங்களைத் தெரிசித்தேன். தீனனாகிய என்னைத் தங்கள் கிருபாநோக்கத்தால் மரணத்தினின்றும் காப்பாற்றி யருளவேண்டும் குருநாதா என்று பிரார்த்திக்கின்றான்.

(தொடரும்) பூ. ஸ்ரீநிவாசன், தமிழ்ப்பண்டிதர், சித்தூர்.

---



# ஆரியசித்தாந்தம்.

(256-ம் பக்கத் தொடர்ச்சி.)

## யோகம்.

ஆக்கிஞ சக்கரத்திலுள்ள ருத்திர கிரந்தியைப் பேதித்துக்கொண்டு பிராணன் சிவஸ்தானமாகிய புருவமத்தியை அடையும்போது விஷயாநந்தங்களை வென்று ஆத்மானந்த சுகமுடையவனாய் வாதபித்த சேத்தும தோஷங்களொழிந்து சகல துக்கங்களும் நீங்கி, பசி, தூக்கம், வியாதி, மூப்பு இல்லாதவனாவான்.

அதன்பின் நிஷ்பத்தி அவஸ்தை உண்டாகும். அதாவது பிராணன் பிரம ரந்திரத்தில் செல்லும் அவசரமாம். அச்சமயம் வீணைகானமும் வேணு நாதமும் கேட்கப்படும். அவனது சித்தம் சிவமயமாகும். நிச்சலமாய் நிற்கும். இவ்வாறு சிவமயமாய் ஒன்றி அசைவற்று நிற்பதே சிவயோகமென்று புகழப் படுவதாம். சிருஷ்டியாதி தொழில்களைச் செய்யவும் வல்லவனாய் ஈசுவரனை ஒப்பாவான். இராஜயோகத்தை அடையாமல் வாயுவைக்கட்டுதல் முதலிய அப்பியாச சொரூபமாகிய யோகாப்பியாசி அந்த யோகத்தால் அடையும் பயனை அடையாமல் வீண் பிரயாசத்தையே அடைவான்.

இவ்வாறு யோகசித்தி பெறுவதற்கு முற்கூறிய நாதானுசந்தானமே துணைக் கருவியாம்.

சமாதி பிரத்தியாகார தாரணை தியானங்கள் வருமாறு:—பிரத்தியாகார மென்பது திருப்புதலென்று பொருள் தருவதாம். அதாவது விஷயாதிகளை அநுசரித்துப் பஞ்சேந்திரியங்களிலும் அலையும் மனத்தை அவற்றில் செல்ல வொட்டாமல் தடுத்து பரம்பொருளினிடத்தில் செல்லும்படி திருப்புதலாம். அது நாதானு சந்தானத்தினாலன்றி வேறெதனாலும் முடியாது. நாதத்தில் மனம் லயிக்கும். சப்தாதி விஷயமாகிற வனத்தில் சஞ்சரிக்கிற மனமாகிய யானையை அடக்குவதற்கு நாதானு சந்தானம் அங்குசம் போல்வதாம் என்று நூல்கள் கூறுகின்றன. இங்ஙனம் நாதத்தினால் அடங்கி, பரம்பொருளில் இலயித்திருப்பதினால் தாரணை யுண்டாகின்றது. விஷயங்களில் செல்லும் மனதைப் பலாத்காரமாக இழுத்துத் திருப்புதலே பிரத்தியாகாரமாம். அப்போது எதைப் பார்த்தாலும் பிரமமாகவே தோற்றும். பாதம், கட்டை விரல், பாடு, கணைக்கால், முழந்தாள், தொடை, பாயு, இலிங்கம், நாபி, இருதயம், கழுத்து, மிடறு, அண்ணம், மூக்கு, கண், நெற்றி, தலை இந்தப் பதினெட்டு இடங்களிலும் மேலும் கீழுமாகத் தரித்தல் பிரத்தியாகாரமாம். நித்திய கர்ம பல தியாகம் செய்தலும் தன்னுயுள் பரியந்தம் செய்வனவெல்லாவற்றையும் பிரமார்ப்பணம் செய்வதும், சர்வ கர்மங்களையும் சிவாராதனைப் பத்தியாகச் செய்வதும்

ஒன்றையும் கவனியாமலிருப்பதும் இவற்றினால் மனதைப் பிரமத்தினிடம் சேர்த்தலும் பிரத்தியாகாரமாம்.

சரீர மத்தியிலுள்ள ஆகாசத்தில் வெளி ஆகாயத்தையும், பிராணவாயுவில் வெளிவாயுவையும், உதராக்கினியில் புற அக்கினியையும், அப்புவில் அப்புவையும், பிருதிவியில் பிருதிவியையும் தரித்தல் தாரணையாம். பாதம் முதல் முழங்கால் வரையில் பிருதிவி ஸ்தானமாம். பிருதிவிக்கு வடிவு நாற்கோணம். நிறம் மஞ்சள். மந்திர எழுத்து லகாரம். இந்தப்பூமி அம்சத்தில் வாயுவை ஆரோபித்து, பொன்வண்ணமாகிய பிரமாவை லகாரத்தோடு நான்குமுக முடையவராய்த் தியானித்து ஐந்துநாழிகை அமர்ந்திருந்தால் பிருதிவி ஜயமுண்டாகும். இந்த யோகிக்குப் பிருதிவியினால் சேதமுண்டாகாது. முழங்காலுக்குமேல் பாயுவரையில் அப்புஸ்தானமாம். அப்பு அர்த்த சந்திரவடிவமானது. வெண்ணிற முள்ளது. வகார பீஜாக்ஷர முள்ளது. இந்த அப்புஸ்தானத்தில் பிராணவாயுவை நிறுத்தி, நாராயணமூர்த்தியை நான்கு புயங்களுடன், கிரீடந் தரித்தவரும், படிகவண்ணமுடையவரும், பீதாம்பர மணிந்தவருமாக வகார பீஜத்துடன் தியானித்து ஐந்து நாழிகையிருந்தால் அந்த யோகி அப்புவை ஜயிப்பான். அவனுக்கு ஜலத்தினால் நாசமுண்டாகாது. பாயுமுதல் இதயம் வரையில் அக்கினிஸ்தானம். அது முக்கோண வடிவமும், செந்நிறமும் ரகார பீஜமுமுடையது. இந்த அக்கினியில் பிராணவாயுவைச் சேர்த்து, அருணவண்ணமுடையவரும், மூன்று கண்களையுடையவரும், சர்வாங்கமும் விபூதியணிந்தவரும், பிரசன்னரும் வரமளிப்பவருமாகிய ருத்திர மூர்த்தியைச் சிந்திக்கவேண்டும். ரகார பீஜத்துடன் ஐந்து நாழிகை தியானிக்கிறவன் அக்கினியை ஜயித்தவனாவான். அக்கினியினால் அழியமாட்டான். அக்கினி குண்டத்தில் குதித்தாலும் அக்கினி அவனைத் தகிக்காது. இதயமுதல் புருவம் வரையில் வாயுஸ்தானமாம். வாயு அறுகோண வடிவமும், கரியநிறமும், யகார பீஜமும் உடையது. இந்த ஸ்தானத்தில் வாயுவைச் சேர்த்து எங்கு முள்ள சர்வக்ஞராகிய மஹேசுவரரை யகாரத்தோடு தியானித்தால் அவன் வாயுவைப்போல் ஆகாயத்தில் சஞ்சரிக்க வல்லவனாவான். அவனுக்கு வாயுவினால் நாசமில்லை. பயமுமில்லை. புருவநடுமுதல் சிரசுவரையிலும் ஆகாயஸ்தானமாம். அது வட்ட வடிவமும், புகை நிறமும், ஹகார பீஜமுமுடையது. இந்த ஆகாயத்தில் பிராணவாயுவைச் சேர்த்துச் சுத்த ஸ்படிக நிறமும், ஐந்துமுகமும், பத்துத்தோள்களும், மூன்று கண்களும் உள்ளவரும் சர்வாயுதங்களைத் தரித்தவரும் உமாதேவியாரை ஒரு பக்கத்தில் உடையவரும், இளம்பிறை தரித்தவரும், சர்வகாரண காரணருமாகிய மஹாதேவரை, வியோம (ஆகாஸ) வடிவ சதாசிவத்தை ஹகார பீஜத்தோடு ஐந்துநாழிகை தியானிக்கவேண்டும். இவன் ஆகாஸ தாரணையால் ஆகாஸத்தில் சஞ்சரிக்கும் வல்லமையுடையவனாவான். எங்கே யிருந்தாலும் சுகத்தையே அனுபவிப்பான். புருஷனிடத்தில் பாசிவத்தைப் பாவித்துத் தாரணைசெய்யவேண்டும். இவன் சகல பாவங்களினின்றும் விடுபடுவான். பிரமாதிகாரிய பொருள்களைத் தத்தம் காரணத்தில் ஒடுக்கி எல்லாவற்றிற்கும்

காரணமான அவ்விபாகத்தைப் பிரணவ சொரூபமான பரமாத்துமாவினிடத்தில் ஒடுக்குவதுவே தாரணையாம்.

தியானமாவது-சத்தியமும் பரப்பிரமமும், சம்சார வியாதிக்கு ஔஷதம் போல்பவருமாகிய மஹேசுவரனை நானென்று பாவித்துத் தியானிக்கவேண்டும். இதற்கும் நாதானுசந்தானமே துணையாம். மனம் ஒருமைப்படும் வரையில் சொரூப பாவனை செய்யவேண்டும். இந்தப் பாவனை சகுணம் நிர்க்குணமென்று இருவகைப்படும். சகுண வடிவபாவனையே முதலில் செய்ய வேண்டும். அது ஒன்றைப்பற்றியே நிற்கும் இயல்புள்ள மனதைக்கட்டும் பாசம் போல்வதாம். ஸ்தூலப்பொருள்களில் நின்ற மனது சூட்சுமப் பொருள்களில் பற்றி நிற்கும் சாமர்த்தியமுடையதாகும். இது தியானமாம்.

சமாதியாவது ஜீவாத்மாவும் பரமாத்மாவும் ஐக்கியப்படுவதேயாம் ஆத்மா ஒன்ருகவேயிருந்தும் மாயா மயக்கத்தால் பேதமாகக் காணப்படுகின்றது. ஆகாஸமொன்றே கடாகாயம் படாகாயமென்று பேதமாகவிருப்பதுபோல பரப்பிரமமொன்றே மயக்கவறிவினர்களால் ஜீவாத்மா பரமாத்மாவென்று வேறு படுத்திக் கூறப்படுகின்றது. நான் இந்திரியாதிகளும், பிராணனுமல்ல; கேவல சிவமே. சாட்சி சொரூபமான சிவமேயான் என்று அறிதலே சமாதியாம். இப்படி ஜீவபரபேதமின்றி ஏகமான அத்வைத உணர்ச்சியே சமாதியென்று யோகநூல்கள் கூறுகின்றன. இதனுல் நானே பிரமம் பிரமமே நானென்னும் ஞானமே சமாதியாம். தியானம் தியானிப்பவன் இரண்டையும் விட்டுத் தியானிக்கப்படும் பொருள் ஒன்றையே விஷயமாகக் கொண்டிருப்பது சமாதியாம். இந்தச் சமாதி சவிகற்பம் நிர்விகற்பம் என்று இருவகையாம். கரண மனோவிருத்திகள் ஒடுங்கிச் சித்தம் பிரமத்தில் இலயித்திருப்பது நிர்விகற்ப சமாதியாம். சவிகற்ப சமாதி சப்தாநுவித்தம் சப்தானநுவித்தம் என்று இருவகைப்படும். "அஹம்பிரமாஸ்மி" என்னும் சப்தோச் சாரண பூர்வமாகச் செய்யப்படுவது சப்தானுவித்தம்; அப்படியுச் சரியாமலிருப்பது சப்தானநு வித்தமாம்.

இவ்வாறு சமாதியிலிருந்து நாதானு சந்தானம் (நாதத்தை யெழுப்புதல்) செய்து, அநாகதத்தில் (இருதயஸ்தானம்) இருந்து உண்டாகும் தொனியைக் கேட்பதே சித்தலய உத்தம சமாதிக்குக் காரணமாம். இந்த அநாகத தொனிக்குள் பிரமமிருக்கின்றது. அதனுள் மனமடங்கி நிற்கும். அதுவே சமாதிலயமாம். அப்போது யாதொரு செயலுமில்லாமையால் அது நிருபாதிகப் பிரமசொரூபமாம். ஈண்டு மனத்தோடு சப்தம் இலயமாதலால் அது பரப்பிரமமென்று சொல்லப்படும் பொருளாம். இதனுல் சகல விருத்திகளுமொடுங்கின விடமே பரப்பிரமம் என்று கூறப்படுகின்றது. இந்த நாதமே சத்தியமாம். தத்துவங்கள் ஒடுங்கி நிராகாரமாயிருப்பதுவே பரமான்மாவென்று அறியவேண்டும். இதுவே துரியாவஸ்தையாம். இந்த அவஸ்தையை அடைந்தவன் ஜாக்கிர சொற்பன சுழுத்திகளைக் கடந்து தன்னையும் மறந்து இறந்தவனைபபோலாய் விடுவான். இதுவே ஜீவன் முத்தி நிலையாம். இதனையே,

*

"சொன்னக்ர வுஞ்ச கிரியூ டுருவத் துளைத்தவைவேள்
மன்ன கடம்பின் மலர்மாலை மார்பமௌ னத்தையுற்று
நின்னை யுணர்ந்துணர்ந் தெல்லா மொருங்கிய நிர்க்குணம்பூண்
டென்னை மறந்திருந் தேனிறந் தேவிட்ட திவ்வுடம்பே"

என்று ஆன்றோர் கூறியுள்ளார். உயிரோடிருந்தும் ஸ்பரிச சுகங்களாகிற அரிவைசுகந்த புஷ்பாலங்கிருதாலிங்கனாதிகளையும், அடித்தல், குத்தல், எரித்தல் முதலிய துன்பங்களையும் உணராது பிரமத்திலேயே இலயித்திருத்தலால் இறந்தேவிட்ட திவ்வுடம் பென்றார். இவன் சுகதுக்கங்களையும் மானவமானங்களையும் அறியமாட்டான்.

ஜாக்கிராவஸ்தையி லிருந்துகொண்டே தூங்குகிறவனைப்போல சகலவுணர்வுகளையும் மறந்து இருக்கிற இவனை அஸ்திர சஸ்திரங்களும் மந்திர தந்திரங்களும் பாதிக்கமாட்டா. இறக்கவுமாட்டான். இவனுக்கு நினைப்பும் மறப்பும் உண்டாகா, சுவாசநிவாசங்களும் காணப்படமாட்டா. இதனையே,

" ஆங்கா ரமுமடங் காரொடுங் கார்பர மானந்தத்தே
தேங்கார் நினைப்பு மறப்பு மறார்தினைப் போதளவும்
ஓங்காரத் துள்ளொளிக் குள்ளே முருக னுருவங்கண்டு
தூங்கார் தொழும்பு செய்யாரென் செய்வாரெம தூதருக்கே"

என்று பெரியோர் கூறினர். ஓங்காரத் துள்ளொளி என்றது பிரணவ சொரூபமாகிய நாதத்தொனிக்குள் பிரகாசிக்கும் பரப்பிரமசொரூபத்தை. அது முன்னர் கூறப்பட்டது.

" ஒளியில் விளைந்த வுயர்ஞான பூதரத் துச்சியின்மே
லளியில் விளைந்ததோ ரானந்தத் தேனை யநாதியிலே
வெளியில் விளைந்தவெறும்பாழைப்பெற்ற வெறுந்தனியைத்
தெளிய விளம்பிய வாமுக மாறுடைத் தேசிகனே "

என்று பெரியோர் கூறினர். "ஒளியில் விளைந்தவுயர் ஞானபூதரம்" என்றது ஆக்ஞாசக்கிரநிலையை. "வெளி" என்றது புருவமத்தியத்துக்குமேல் பிரமரந்திரம் வரையில் ஆகாயஸ்தானமென்று முன்னரே கூறிய ஆகாயநிலையை. "வெறும்பாழ்" என்றது யாதொரு செயலுமற்று நிர்விகாரமாய்ப் பிரகாசித்துக்கொண்டிருக்கும் நிர்விகற்ப பிரமத்தை. இவ்வாறு யோகநெறியை யுணர்ந்து இராஜயோக சமாதிகூடுவதே மோட்சமென்று பெறப்படுதலால் யோகமார்க்கமொன்றே முத்திநெறி என்றும், மற்றவை யாகாவென்றும் யோகநூல் கூறும்.

(தொடரும்) சிவானந்தசாகர யோகீஸ்வரர்.

---

உ

சிவமயம்.




## எறிபத்த நாயனார் புராணத்தின் சில விசேடக் குறிப்புகள்.

(258-ம் பக்கத் தொடர்ச்சி.)

### 10. அரசர் கடமை.

உயிர்க்குயிராக மறைந்து நின்று உயிர்களைக் காக்கின்றவர் கடவுள். உயிர்க்குயிராக வெளிநின்று உயிர்களைக் காக்கின்றவன் அரசன். ஆதலினாற்றானே கடவுளுக்குரிய இறைவன், நாயகன், பதி முதலிய பெயர்கள் அரசனுக்குமாயின.

"நெல்லு முயிரன்றே நீருமுயி ரன்றே
மன்ன னுயிர்த்தே மலர்தலை யுலகம்
அதனால்—
யானுயி ரென்ப தறிகை
வேன்மிகு தானை வேந்தற்குக் கடனே" (புறநானூறு 186.)

"மண்ணில் வாழ்தரு மன்னுயிர் கட்கெலாங்
கண்ணு மாவியு மாம்பெருங் காவலன்" (மநுநீதிகண்டபுரா-14.)

"முறைசெய்து காப்பாற்று மன்னவன் மக்கட்
கிறையென்று வைக்கப் படும்" (வாயுறை வாழ்த்து இறைமாட்சி-8.)

உலகமும், உலகத்திலுள்ள உயிர்களும், உலகியலும் ஆகிய மூன்றையும் ஓர் உயிராகக் கொண்டால், அவ்வுயிர் நிலைபெற்றிருக்கின்ற உடலெனப்படுவது அரசனும். அதனால் அரசனாகிய உடலுக்கு அம்மூன்றுமே உயிராகும். ஓர் உடல் நிலையுற்று அழகுபெற வேண்டுமானால் அதனுயிரை எவ்வாறு வருந்திக் காக்கவேண்டுமோ, அவ்வாறே அரசனும் தான் நிலையுற்று அழகு பெற்று நன்மையுற வேண்டினால், அவன் தன துயிராகும் உலகு, உயிர்கள், உலகியல் ஆகியவைகளை எவ்வகையினும் வருந்திக் காக்கவேண்டும்.

அரசன் உலகத்தைக் காப்பதற்கு, படை, குடி, கூழ், அமைச்சு, நட்பு, அரண் எனும் ஆறையுந் தனக்கு உறுப்பாகக்கொண்டு தன்னாலும், தன் பரிசனங்களாலும், பகைவர்களாலும், கள்வராலும், துஷ்டப் பிராணிகளாலும் உலகிற்கு இடையூறு வாராது காத்து, குறையிரப்பார்க்குக் காட்சிக் கெளியனா யிருத்தல் வேண்டும். அங்ஙனம் காக்கின்ற காலபேதத்தால் குடிகள்

தளர்வுற்றகாலை தனக் கிறையாகக் கொள்ளும் ஆறிலொன்றை முழுவது மாகுதல் ஓர் பகுதியாகுதல் விடல் வேண்டும். அல்லது ஏற்ற காலம்வரைக் காத்திருந்தாவது தகுதியானதைப் பெறல் வேண்டும்.

அவ்வாறு செய்யாது குடிகளை வருத்தித் தன திறைப் பொருளைக் கொள்ளுகின்ற கோமகனைவிட, வழிமறித்துக் கொள்ளை யடிக்கும் வேடர்கள் மிக நல்லராவார்கள்.

அரசன் தனது கடமையிற் பிறழ்ந்தால், சத்தியத்தில் தவறினால், கோள்கள் நிலைமாறி, வாரிவளங்குன்றி, பஞ்சம் மிகுந்து, நோய், பசி முதலியவற்றால் உயிர்கள் துன்புறும். ஆதலால் அரசன் எவ்விதத்திலும் தனது கோல் கோடாது ஒழுகுதல் வேண்டும்.

"வைய மன்னுயி ராகவும் மன்னுயி
ருய்யத் தாங்கு முடலன்ன மன்னன்" (இராமாயணம்.)

"இருநிலத்தி லுயிர்வருத்தந் தன்வருத்த மெனக்கொண்டே
பொருதளித்திட் டவையுவப்ப வுவப்பெய்தும் புந்தியினன்"
(திருப்பெருந்துறைப்புராணம்)

"செவிகைப்பச் சொற்பொறுக்கும் பண்புடை வேந்தன்
கவிகைக்கீழ்த் தங்கு முலகு" (திருக்குறள்.)

"இன்று கொளற்பால நாளைக் கொளப்பொரு
ளின்று குறையிரப்ப நேர்படான்—சென்றொருவ
னுவன கூறி னெயிறலைப்பா னறலைக்கும்
வேடலன் வேந்து மலன்." (நீதிநெறிவிளக்கம்)

"மழைவளஞ் சுரக்குமாறும் வயனிவம் விளையு மாறும்
விழையறம் வளரு மாறும் வேதநூல் விளங்கு மாறுந்
தழை பொரு ளீட்டு மாறுஞ் சமரிடை வெல்லுமாறும்
பிழைதப வாழுமாறும் பிறழ்தராக் கோலினாகும்." (விநாயகபுராணம்.)

"வேந்தன் முறைதிறம்பின் வேத விதிதிறம்பு
மேந்திழையார் தங்கற்பு மில்லறமு நில்லாவா
மாந்தர் பசியா லுணங்க மழைவறந்து
பாந்தண் முடிகிடந்த பாரின்விளை வஃகுமால்."
(பிரமோத்தரகாண்டம்)

"கோனிலை திரிந்திடிற் கோணிலை திரியுங்
கோணிலை திரிந்திடின் மாரிவறங் கூரு
மாரிவறங் கூரின் மன்னுயி ரில்லை
மன்னுயி ரெல்லா மண்ணாள் வேந்தன்
றன்னுயி ரென்னுந் தகுதியின் றாகும்." (மணிமேகலை)

(தொடரும்) பஞ்சாட்சரபுரம், வாலையாநந்தம்.

---



# வைணவம்

ஸ்ரீ

## நடாதூரம்மாள்.

இப்பெண்கள் நாயகம் காஞ்சியம்பதியில் தேவராஜப் பெருமான் என்பவருக்கு 'வரதகுரு' என்னும் நாமதேயத்துடன் பிறந்தவர். பூர்வ புண்ணியப் பேற்றால் இளம் வயதிலிருந்தே கல்வி கேள்விகளிற் சிறந்து ஞானசக்தி வைராக்கியங்களிலோங்கி, பகவானையும் அவனடியாரையும் இவர் வழிபடும் பாக்கியத்தைத் தழுவி வரலானார்; தந்தையாரது அனுமதிபெற்று, எங்களாழ்வான் என்னும் ஞானசாரியரிடம் ஸ்ரீபாஷ்யம் சேவிக்க அவ்வாசாரியருடைய திருமாளிகைககு எழுந்தருளினார்; ஆசாரியர் வீட்டு வாசற்கதவு தாளிட்டிருந்தது கண்டு அதைத் திறக்கும்படி தட்டினார். உடனே எங்களாழ்வான் என்பார் "யார்?" என்றனர். அம்மையார் "நான்தான்" என்றார். அதுகேட்டு ஆசாரியர் 'அப்படியானால், நான் செத்தபின் வருக" என்று பதிலளித்தார்.

அம்மையார் தமது இல்லத்திற்குத் திரும்பிவந்து நடந்த விஷயத்தைத் தம் தகப்பனாரிடம் தெரிவித்தார். அவர் தம்முடைய செல்வப் புத்திரியை நோக்கி "அம்மா! உலகத்தில் சாதாரணமாக "பேதைமை என்பது மாதர்க் கணிகலம்' என்னும் ஒரு பழமொழி வழங்குவதுண்டு. அப்பேதைமை நல்லுணர்வு பெற்ற உன்னையும் மயக்கிற்றுபோலும். 'நான்' என்னும் அகங்காரமும், 'எனது' என்னும் மமகாரமும் பக்தி மார்க்கத்திற் புகுந்தவர்பால் இருத்தல் சிறப்புடைத்தன்று. ஆழ்வார்,

"நீர்நும தென்றிவை, வேர்முதன் மாய்த்திறை
சேர்மின் உயிர்க்கதன், நேர்நிறை யில்லே"

என்றருளிச் செய்துள்ளார். ஆகவே நீ ஆசாரியரிடம் 'நான்தான்' என்றது அகங்காரத்தை விளக்குதலின் அது ஒழிந்தபின் வா என்று அவர் உன்னை அனுப்பிவிட்டார். நீமீண்டும் அவரிடஞ்சென்று பணிவுரையாடி ஸ்ரீபாஷ்யத்தைச் சேவிக்கக் கடவாய்" என்றோதினர்.

அம்மையார் அவ்விதமே ஆசாரியரிடம் போய் மிக்க தாழ்மையோடு 'அடியேன் இராமாநுஜதாசன்' என்று சாஷ்டாங்கமாகத் தெண்டன் சமர்ப்பித்தார். ஆசாரியரும் அவரை யன்புடன் ஏற்று "அம்மையாரே! நீரெனக்குப் புத்திரன் போலிருந்து எனது அந்திய காலத்தில் ஆகவேண்டிய சரமகிரியைகளைச் செய்து முடிப்பதாய் பிரதிக்ஞை செய்து தருவீராயின் உமது விருப்பத்தைப் பூர்த்தி செய்வேன்" என்றார்.

அம்மையார் இதைத் தம் தந்தையாரிடம் தெரிவித்து, அவருடைய உத்தரவு பெற்றுக்கொண்டு அங்ஙனமே செய்வதாக ஆசாரியருக்கு வாக்குத்தத்தம் புரிந்து, தமது விருப்பத்தைச் சந்தேக விபரீதமற முடித்துக்கொண்டார்.

ஆசாரியர் திருநாட்டுக் கெழுந்தருளும் பரியந்தம் அவருக்கு வேண்டிய சிஸ்ருஷை நடத்திவந்து, அவர் திருநகடலங்கரித்ததும் தாம் கொடுத்த வாக்கு நாணயத்தை நிறைவேற்றினர்.

பிறகு இவ்வம்மையார் கச்சிவாய்த்தான் மண்டபத்தில் சிஷ்ய வர்க்கத்தினர் பலர்டன் பகவத் காலக்ஷேபம் சாதித்து வந்தனர். இக்கோஷ்டியில் ஸ்ரீ பராசரபட்ட ரென்பவருஞ் சேர்ந்திருந்தார். பட்டர் ஒருநாள் அந்தக் காலக்ஷேபத்திற்கு வராதிருந்தார். அப்போது அம்மையார் காலக்ஷேபத்தை நிறுத்திவைத்தார். இதன்காரணத்தையறிய, சிலர் அம்மையாரைக் கேட்டபோது அவர், 'காலக்ஷேபத்திற் கேட்ட அர்த்த விசேஷங்களெவ்வளவையும் சொல்ல வல்லவர் அவராதலின் அவர் வாராமையால் இன்று அதனை நிறுத்தினேம்' என்று சொல்லி, பராசரபட்டர் மறுநாள் வந்ததும் அவரைத் தம்பால் கேட்ட விஷயங்களை வெளியிடச் செய்து அதற்கு 'சுருதப் பிரகாசிகை' எனப் பெயரிட்டனர்.

சிலர் இவ்வம்மையாரிடம் வாதத்திற்கு வந்தனர்; அம்மையார் அவர்களை வாதில் வெற்றிபெற்று, வாதிஹம்ஸாம்புதர் என்னும் பெயரை யுற்று, பெருமாளுக்குப் பாலமுது செய்வித்து வந்தனர். ஒரு சமயம் பாலமுது சூடாயிருந்தமையால் இவர் தமது கைவிரலை அந்தப் பாலில் இட்டுப் பார்த்தனர். இதனைப் பெருமாள் கண்டு, அம்மையாரை நோக்கி "தாயானவள் இவ்வண்ணம் பாலூட்டுவது குழந்தைக்கல்லவா? நீர் என்னைக் குழந்தையாகப் பாவித்தபடியால் 'என் அம்மாளோ'! என்று இவரை யழைத்தனர். அது முதல் இவருக்கு 'அம்மாள்' என்னுந் திருநாமம் வழங்கலாயிற்று.

பின்னொரு சமயம் இவர் காட்டு மார்க்கமாகத் திருவேங்கட ஸ்தலத்திற்கு யாத்திரை செய்யும்போது வழியில் பெருமாளுக்குப் பிரசாதம் தயாரித்து அமுது செய்விக்க அனுகூலமான வசதி நேராமையால் திருவாராதனை மட்டும் செய்துவிட்டுத் தாம் உபவாசமா யிருந்தார். இதையறிந்த திருவேங்கடமுடையான் ஒரு அந்தணரைப்போல் இவர் முன் தோன்றினார். இவர், அவரை அன்புடன் பணிந்து 'தேவரீர் யார்' என்று வினவ, வந்தவர் 'திருவேங்கடமுடையான் அமுதுசெய்த பிரசாதத்தைத் தேவர் நிமித்தம் கொண்டு வந்தனன்' என்றார். அம்மாள் அமுது செய்ததும் வந்தவர் மறைந்தருளினர். அம்மாள் இது பெருமாள் செயல் என்று நினைத்து ஆனந்த பரவசராய் திருவேங்கடஞ் சென்று பகவானைப் பலவாறு மனதாரத் துதித்து அங்கு சில்காலந் தங்கிப் பின்னர் காஞ்சியம்பதிக்குத் திரும்பி, காலக்ஷேபம் செய்திருந்து திருநாட்டுக் கெழுந்தருளினர்.

இவரைப்போல் எத்தனையோ பெண்மணிகள் பகவத் பக்தியிலீடுபட்டு மேன்மை யடைந்திருக்கின்றனர். கணவரோடு கடவுளை வழிபடும் பாக்கியத்தை எல்லா ஸ்திரீகளும் கைப்பற்றிவரின் நாடு நன்னிலையடையும் என்பது திண்ணம்.

ஒரன்பன்.

---




## ஆத்திசூடி உதாரணக் கதைகள்.

(218-ம் பக்கத் தொடர்ச்சி)

### "கொள்ளை விரும்பேல்"

"கொள்ளை—(பிறருடைய பொருளைக்) கொள்ளை யடித்தலை, விரும்பேல்— (நீ) விரும்பாதே" என்பது இதன் பொருள்.

பொருளுடன் வீட்டிலிருப்பவர்களையோ, வழியிற் செல்பவர்களையோ அடித்து வருத்தி அவர்களிடமுள்ள பொருளைக் கவர்ந்து செல்வதே கொள்ளை யென்பதாம். இது மனிதரைத் துன்புறுத்தி அவர் கைப்பொருளைக் கவருந் தொழிலாதலால் மிகவும் கொடியதாம். இதனைச் செய்வோர் நற்கதி யடைய மாட்டார்கள்; இவ்வுலகத்திலும் சௌக்கிய மடையமாட்டார்கள். பெருங் கேட்டிற்குள்ளாகி அழிவார்கள். அவ்வாறு கெட்ட கொள்ளைக் காரர்களுடைய கதைகள் பலவுண்டு. அவற்றுள் ஒன்றை இதனடியில் விளக்குவாம்.

பண்டைக் காலத்தில் நம்நாட்டில் பலவகைக் கொள்ளைக் கூட்டத்தினர் பரவியிருந்தனர். இவர்களுள் கத்தி, ஈட்டி, கொம்பு முதலிய ஆயுதங்களுடன் பெருங் கூட்டமாகச் சென்று, ஊர்ப்பிரயாணஞ் செய்வோரை இராக்காலத்தில் வழியில் மறித்து அடித்தும், கிராமங்களிற் புகுந்து அவ்விடங்களிலுள்ளவர்களைத் துன்புறுத்தியும் அவர்களிடமுள்ள பொருள்களைக் கைப்பற்றிச் செல்வோர் ஒருவகையார். மேற்கூறிய ஆயுதங்களுடன் தீவத்திகளைக் கைகளிற் பிடித்துக்கொண்டும், உருவந் தெரியாமலிருக்கும்படி முகத்தில் கரியைப் பூசிக்கொண்டும் முன்னுரைத்த இரண்டிடங்களினும் கொள்ளை யடிப்போர் ஒரு வகையார். பின் கூறப்பட்டவர்கள் தீவத்திக் கொள்ளைக்காரர் என்று கூறப்படுவார்கள். இவர்கள், தாங்கள் வளைந்து கொண்ட மனிதர்களிடமுள்ள பொருளைக் கேட்கும்போது தடையின்றிக் கொடுத்துவிட வேண்டும்; மறைத்து வைத்திருந்தால் அவ்வாறு மறைத்து வைத்த இடத்தைக் காட்டிவிட வேண்டும்; அவ்வாறு கொடாவிட்டாலும், காட்டாவிட்டாலும் அக்கொள்ளைக்காரர்கள் தீவத்திகளால் அவர்களுடைய முகத்தில் சுடுவார்கள். இவர்களுடைய பெயரைக் கேட்டாலும் மனிதர்கள் நடுங்குவார்கள். இந்தத் தீவத்திக் கொள்ளைக்காரர்கள் எவர்க்கும் அஞ்சாதவர்களாதலின், தாங்கள் கொள்ளை யடிக்கப்போகும் கிராமத்தாருக்கு முந்தியே தாங்கள் புறப்பட உத்தேசித்திருக்கும் நாளைத் தெரிவித்து விட்டுப் போகும் வழக்கமும் சில சமயங்களில் உண்டு.

இத்தகைய கூட்டத்தாரில் மிகவும் கொடுமையான ஒரு கூட்டத்தார் ஒருநாள், ஒரு கிராமத்திற்குக் கொள்ளையடிக்கப் போகத் தீர்மானித்து அக் கிராமத்தாருக்கு, "உங்கள் கிராமத்திற்கு நாளைக்குக் கொள்ளையடிக்க நாங்கள் வருவோம்" என்று முன்னறிக்கை அனுப்பினார்கள். அவ்வூரார் அவ்வறிக்கையைப் பார்த்தவுடன் "ஐயோ! என் செய்வோம்" என்று மிகுந்த நடுக்கங் கொண்டார்கள். "இவர்களை எவராலும் அடக்குதல் முடியவில்லையே" என்று வருந்தினார்கள்.

அப்போது அங்கே புத்தியிற்சிறந்த ஒருவனிருந்தான். அவன் ஊராரை நோக்கி, "நீங்கள் அஞ்சாமலிருங்கள்; நான் அவர்களைத் தொலைத்து விடுகிறேன்" என்று மறுநாள் பகலில் ஊருக்கு வெளியில் சற்று தூரத்தில் மனிதர்கள் வரும் முக்கியமான வழியில் மிக்க உயரமும் நீட்சியுமான தென்னந்தட்டிப் பந்தலொன்றமைத்தான். நடக்கும் வீதியை மாத்திரம் விட்டுவிட்டுப் பந்தலின் இரண்டு பக்கங்களையும் தட்டியால் மூடிவிட்டான். பந்தலுக்குக் கீழே தரையில், அந்தக் காலத்திலிருந்த நாட்டு வெடிமருந்தை, பந்தல் எவ்வளவு தூரமிருந்ததோ அவ்வளவு தூரம் வரையில் அரையங்குல கனமிருக்கும்படி கூடைக் கணக்காகக் கொண்டுவந்து சிதறிவிட்டான். அதன் மேல் மெல்லிய துணிகளை விரித்துவிட்டான். நீண்ட வெடிமருந்துத் திரியொன்று செய்து அதன் ஒரு முனையைப் பந்தலுக்குக் கீழ் வெடிமருந்து சிதறிய விடத்தில் புதைத்து மற்றொரு முனையைப் பந்தலுக்கு வெளியில் சற்று தூரத்தில் ஒரு செடி மறைவில் நீட்டி வைத்து விட்டான். அந்த ஊருக்குள் யார் நுழைய வேண்டுமானாலும் அந்த வழியாகத்தான் போக வேண்டும்.

இந்த வேலைகளெல்லாம் முடிந்தபின் அந்த மனிதன், இரவானதும் ஒரு தேங்காய் நார்க்கயிற்றில் நெருப்பைக் கொளுத்திக்கொண்டு, அந்தப் பந்தலுக்குப் பக்கத்தில் வெடி மருந்துதிரி வைக்கப்பட்டிருந்த செடி மறைவில் போயிருந்தான். இரவு பன்னிரண்டு மணியானதும் சுமார் ஐம்பது தீவத்திக் கொள்ளைக்காரர்கள், கைகளில் ஆயுதங்களையும் தீவத்திகளையும் வைத்துக்கொண்டு மிக்க பயங்கரமான கூச்சலுடன் அவ்வூரை நோக்கிச் சென்று மேற்கூறிய பந்தலைப் பார்த்து, "ஏதோ கோவில் திருவிழாவுக்காக இப்பந்தல் போடப் பட்டிருக்கிறது" என்று நினைத்துச் சந்தேகமின்றி அதற்குள் நுழைந்தார்கள். எல்லோரும் பந்தலின் நடுவில் வந்ததும் செடி மறைவில் மறைந்திருந்த மனிதன் வெடி மருந்துத்திரியில் நெருப்பைக் கொளுத்திவிட்டு ஓட்டம் பிடித்தான். நெருப்பைத் திரியில் வைத்ததுதான் தாமதம், கண்மூடித் திறப்பதற்குள் பந்தல் முழுவதும் நெருப்பு மயமாய் விட்டது. ஐம்பது கொள்ளைக்காரர்களும் வெந்து மடிந்தார்கள். அவ்வூரார் அந்த மனிதனைக் கொண்டாடினார்கள்.

(தொடரும்) செம்பூர். வீ. ஆறுமுகஞ் சேர்வை.




## மாதரும் குடும்பமும்.

(267-ம் பக்கத் தொடர்ச்சி.)

மகளைக் காட்டிலும் மருமகளை சிறந்தவள் என்று முன் சஞ்சிகையில் கூறினோம். அப்படிச் சொல்வதற்குத் தகுந்த நியாயம் இருக்கிறதென்றும் சொன்னோம். அதைப்பற்றிச் சிறிது ஆராய்வோம்.

ஒரு வீட்டில் ஒரு குழந்தை பிறந்தால் அது வீட்டிற்குப் பிறந்ததா? ஊருக்குப் பிறந்ததா? என்று பிறர் கேட்கும் வழக்கம் நம் நாட்டிலிருக்கிறது. வீட்டிற்குப் பிறந்தது என்றால் ஆண் குழந்தை; ஊருக்குப் பிறந்ததென்றால் பெண் குழந்தை என்றர்த்தமாகிறது. ஆகையால் நம் நாட்டில் பிறக்கும் பெண் குழந்தை அன்னியருக்குச் சொந்தமாய் விடுகிறாள். அப்படியே அன்னியர் வீட்டுப்பெண் நம் வீட்டிற்குரியவளாகின்றாள். நம் பெண்ணை ஒருவனுக்கு விவாகம் செய்து கொடுக்கிறோம். விவாகத்தில் தாரைவார்த்து, தானமாக கன்னிகையைப் பிறர் கையிற் பிடித்துக் கொடுத்துவிடுகிறோம். அப்படியே நம் பிள்ளைக்கு, பிறர், தம் பெண்ணைத் தாரைவார்த்துக் கொடுக்க நாம் பெற்றுக் கொள்ளுகிறோம். இப்பொழுது நம் வீட்டிற்குரியவள் யார்? மகளா? மருமகளா? என்பதைச் சற்று யோசித்துப் பாருங்கள். நாம் கொண்ட பெண்ணாகிய மருமகளை நம் குடும்பத்தைச் சேர்ந்தவளாய் விடுகின்றாளல்லவா? நமது குடும்பத்திற்கும் நம் பெண்ணுக்கும் அவ்வளவு சம்பந்த மிருப்பதில்லை. நாம் ஏழைகளாயிருந்து நம் பெண் பணக்காரன் வீட்டில் வாழ்க்கைப் பட்டால் நாம் ஏழைகள் தான்; நம் பெண் பணக்காரி தான். நாம் பணக்காரர்களாயிருந்து ஓர் ஏழை வீட்டிலிருந்து பெண் கொண்டோமாயின், அப்பெண் தரித்திர குடும்பத்திற் பிறந்தவளாயிருப்பினும் அவள் பணக்காரியே.

சுபாசுப காலங்களில் நம் வீட்டிற்கு வரவும், நாம் இஷ்டப்பட்டுக் கொடுத்தால் சீரும் சிறப்பும் பெற்றுச் செல்லவும் மாத்திரம் நம் வீட்டுப் பெண்ணிற்குப் பாத்திய முண்டேயன்றி வேறெவ்வித பாத்தியமும் கிடையாது. மகள் நம் வீட்டிலிருந்து நமது சொத்துக்களைப் பிறர் வீட்டிற்குக் கொண்டு போகிறவள், மருமகள் பிறர் வீட்டிலிருந்து நம் வீட்டிற்குக் கொண்டு வருகிறவள். மகள் மூன்றுநாள் சூதகபாத்தியமுடையவள்; மருமகள் பதினாறு நாள் சூதகமுடையவள். மகள் தான் வாழ்க்கைப்பட்ட தன் கணவன் வீட்டிற்குரிய கோத்திரத்தைச் சேர்ந்தவள்; வேறு கோத்திரத்திற் பிறந்தவளாயினும் மருமகள் நம் கோத்திரத்தைச் சேர்ந்தவள். மருமகள் வயிற்றுப்பிள்ளை கருமாதிற் கதிகாரியாவதன்றி மகள் வயிற்றுப்பிள்ளை அதிகாரியாவதில்லை. தவிர,

மாமன் மாமிகளுக்குரிய பணிவிடைகளை யெல்லாம் செய்பவள் மருமகளே. அவர்கள் வியாதி வாய்ப்பட்டுப் படுக்கையிற் கிடக்குங் காலத்தில் அவர்களுக்கு எல்லாவித உதவிகளையும் செய்பவள் மருமகளே. அன்னார். கூப்பிட்ட குரலுக்கு 'ஏன்' என்று வருகிறவளும் மருமகளே. 'அடுத்த ஊரிலிருக்கும் மகளாயினும் ஆபத்திற்குதவாள்' என்பது பழமொழி. தப்பித்தவ

றித் தாய் தந்தைகளின் நிலைமையைக் கேள்விப்பட்டு வந்தாலும், வரும் பொழுதே அழுதுகொண்டே வருபவர்கள், வந்து இரண்டொரு நாட்களானவுடனே 'ஐயோ! எங்கள் வீடு என்னகதி யாயிற்றோ. போட்டது போட்டபடி விட்டுவிட்டு வந்துவிட்டேன். அவர் (கணவன்) சாப்பாட்டிற்குக் கஷ்டப்படுவார். என் எண்ணமெல்லாம் அங்கேயே யிருக்கிறது. வீட்டைவிட்டு மூன்று நாளாய்விட்டது. நான் போகவேண்டும். அடிக்கடி உங்கள் சௌக்கியத்தைத் தெரிவித்துக் கொண்டிருங்கள். நிரம்பவும் கஷ்டமா யிருந்தால் அவசரத்தந்தி கொடுங்கள். நான் இங்கிருந்து மாத்திரம் என்ன செய்யப் போகிறேன்' என்று மூட்டைகட்டத் தொடங்கி விடுவார்கள். அக்கம்பக்கத்திலுள்ளவர்களும் 'உண்மைதான் பாவம். அவள் சம்சாரம் கெட்டுப் போகாதா. எல்லாம் அது நன்றாயிருந்தால் தானே' என்பார்கள். இவ்வளவு தான் மகளுடைய சங்கதி.

மருமகள் அப்படிச் செய்யமுடியுமா? எங்கேனும் போய் விடக்கூடுமா? அவள் தாய்வீட்டில் ஏதாவது அசந்தர்ப்பம் நேரிட்டாலும்கூட 'என்வீட்டில் இப்படி யிருக்கையில் நான் அங்கு எப்படிப்போவது' என்று சொல்லவேண்டியவளாவள். மனதார்ந்த பிரியத்துடன் அவள்தன் மாமன் மாமிகளுக்குரிய பணிவிடைகளைச் செய்யாவிட்டாலும் உலகப்பழிக்குப் பயந்தாவது செய்தே தீரவேண்டும். அது அவளுடைய கடமையாகும். அப்படி அவள் செய்யாவிட்டாலும் அக்கம்பக்கத்தார் சும்மா இருக்கமாட்டார்கள். முகத்திலிடித்து அவளுக்குப் புத்தி புகட்டுவார்கள். எப்படி யிருந்தாலும் அவள் செய்தே தீரவேண்டும். அது அவளை விட்டதல்ல. இத்தியாதி காரணங்களால் மகளைவிட மருமகளே சிறந்தவளென்பது வெள்ளிடை மலைபோல் விளங்கவில்லையா!

(இப்படிச் சொல்வதால் மகளிடத்தில் பிரியமுடையவர்களா யிருக்கலாகாதென்றாவது, மகளுக்கும் பிறந்த வீட்டிற்கும் யாதொரு சம்பந்தமுமில்லை யென்றாவது, அம்மகளுக்கு யாதொரு உபசாரமும் செய்யலாகாதென்றாவது நாம் சொன்னதாகப் பெற்றோர் நினைத்துக் கொள்ளுதல் கூடாது. வீட்டில் பிறந்தபெண் கண்ணீர் விடாதபடி அவளைச் சகலவிதத்திலும் சந்தோஷப்படுத்த வேண்டியது அவசியமே. ஆயினும் அவளைக் காட்டிலும் மருமகளே வீட்டதிகாரியாகத் தக்கவள். சர்வ சுதந்திரமுமுடையவள் மருமகளே என்பதை மாத்திரம் நாம் உணராமலிருக்கக் கூடாதென்பதே நாம் இங்கு அறியவேண்டியது.)

இத்தகைய மருமகளிடத்தில் மாமன் மாமிகள் எவ்வாறு நடந்து கொள்ள வேண்டுமென்பதைப்பற்றி வாசகர்களே! ஆலோசித்துப் பாருங்கள். (இங்கு மாமனைப்பற்றி அதிகமாகச் சொல்லவேண்டியதில்லை. ஏனெனில், வீட்டு வியவகாரங்களுக்குரியவர்கள் பெண்களே யாகையால் மாமிக்கும் மருகிக்குமே அதிக சம்பந்தமுண்டு. மாமியார் வீடு என்று உலகத்தார் வழங்குகின்றார்களே யல்லாமல், மாமனார் வீடு என்று வழங்குவதில்லை.) மாமியானவள் தன் மகளிடம் எவ்வளவு அன்பு வைத்திருப்பாளோ அதைவிட அதிக பிரியம் மருமகளிடம் கொண்டிருக்க வேண்டும். மருமகள் அன்னியர் வீட்டிலிருந்து நம் வீட்டிற்குப் புதிதாக வந்தவள். அதிலும் சிறுபிராயத்தினள். உலகானுபவம் தெரியாதவள். தாய் வீட்டில் செல்வமாக வளர்க்கப் பட்டவளாகலின் கஷ்டமான வேலைகளைச் செய்யக்கூடாதவளா யிருக்கலாம். நாம் புதியவர்களா யிருத்தலால் நம்மிடத்தில் அன்பாக நடந்து கொள்ளத் தெரியாதவளாயிருப்பாள். பெற்று வளர்த்த தாய் தந்தையரைவிட்டுப் பிரியாமலிருந்து இப்பொழுது பிரிந்திருக்க நேர்ந்ததால் மிக்க விசனமுடையவளாயு மிருக்கக் கூடும். இவ்வித நிலையிலுள்ள பெண்ணை மாமியானவள் எவ்வளவு அன்பாக

நடத்தவேண்டும்! மருமகள் மாமியாரிடம் அன்பற்றவளா யிருப்பதற்குக் காரணம் மாமியேயாம். 'அந்தவேலை செய்யவில்லை, இந்தவேலை செய்ய வில்லை, அப்படிச் செய்தாள், அவனோடு பேசினுள், சுறுசுறுப்பில்லை, பெருந் தூக்கம் தூங்குகிறுள், பெருந்திண்டிக்காரி' என்று இல்லாத பொல்லாத அப வாதங்களை மாமியார் அவள்மீது சுமத்துவதும், எப்பொழுதும் கடுகடுப்புட னும் வெடுவெடுப்புடனும் பேசுவதுமா யிருந்தால் மருமகள் மாமியிடம் அன் புடையவளாக நடந்து கொள்வதெப்படி? மாமியார் என்றுல் அதிகாரியென் றும் மருமகள் என்றுல் அடிமை என்றும் அர்த்தம் செய்து கொள்ளுகிருர்கள் போலிருக்கிறது. மாமியார், 'அங்கே அதை வைத்திருந்தேன்; மருமகள் திரு டித் தின்றுவிட்டாள். இங்கே இதை வைத்தேன். காணேம். அவள்தான் எடுத் திருப்பாள்' என்று மருமகளுக்குத் திருடிப்பட்டம் கட்டுவதும், அதற்குப் பதில் அந்தப்பெண் ஏதேனும் பேசினுலோ 'பயமில்லாமல் எதிரில்நின்று பேசுகிறுள். பெரிய வாயாடி. பெரியவர்களென்கிற மரியாதை கிடையாது. அடக்கங்கிடையாது' என்று தாறுமாருய்ப் பேசுவதும் உண்டு. இப்படியெல் லாம் மாமியார் அவளைச் சீறுமாறு செய்தால் அவளெப்படி நல்வழிப்படுவாள்.

மருமகளை அலங்கரித்துக் கொள்ளச் செய்து அவளுக்குப் பிரியமான பொருள்களை வாங்கிக்கொடுத்து இனிமையான வார்த்தைகளைப் பேசி, அவள் ஏதாவது தவருக ஒரு காரியத்தைச் செய்துவிட்டாலும் நல்ல வார்த் தைகளால் அதை எடுத்துக்காட்டி 'இப்படி செய்யக் கூடாதம்மா. இதனுல் நமக்குத்தானே கெடுதி யுண்டாகும். பார்க்கிறவர்கள் என்ன சொல்வார்கள்' என்று இதமான வார்த்தைகளால் அவளைத் திருத்தவேண்டும். இவ்வாறு அன்பாக மாமிகள் நடந்துகொண்டால் மருமக்கள்மாருடும் அவர்களிடம் அன் பாக நடந்துகொள்வார்கள். ஆரம்பத்திலே ஒருவர்மீதொருவர் அன்புடையவர் களாய் விடுவார்களானுல் அந்த அன்பு என்றும் மாருது. அப்போது 'மரு மகள் மெச்சும் மாமியாரும் மாமியார் மெச்சும் மருமகளும்' எங்கும் மலிவாய்க் கிடைப்பார்கள். குடும்பமும், கலகங்களும், சண்டை சச்சரவுகளும், அழு கையுமில்லாமல் சந்தோஷகரமாயிருக்கும். விரோதம் நேரிடாது. பிரிவினை யுண்டாகாது. பார்ப்பவர்களுக்கும் கௌரவமாயிருக்கும். இலக்ஷ்மியும் தாண் டவம் செய்துகொண்டிருப்பாள். ஆகையால் இந்த விஷயத்தில் மிகவும் ஜாக்கிரதையா யிருக்கவேண்டுமென்று மாமிகளைக் கேட்டுக்கொள்ளுகிறோம்.

(தொடரும்.) பூ. ஸ்ரீநிவாசன், சித்தூர்.




(270-ம் பக்கத் தொடர்ச்சி.)

## பட்டு உற்பத்தி செய்யும் விதம்.

இப்பட்டடைகள் அப்பட்டுப் பூச்சிகள் கூடுகின்ற வரையில் சிறுதட்டுக் கூடைகளில ஒரே வரிசையாகப் பரப்பப்பெற்றும், அல்லது சிறு கயிறுகளிலிணைக்கப்பட்டு வீட்டின் கூரைகளிற்றெங்க விடப்பட்டுமிருக்கும். கூடிய பூச்சிகளை வெகு சாக்கிரதையாக அப்புறப்படுத்தப்பட்டு, நாணற்குச்சி

களி லமைத்துப் பெண் பூச்சிகள்மட்டும் நூல்கொண்டு கட்டி வைக்கப் படும். பிறகு, அவற்றை அக்குச்சிகளினின்று மெடுத்துத் தொங்கவிடப்பட் டுள்ள துணிகளில் விட்டு வைக்க அத்துணிகளை யப்பூச்சிகள் உறுதியாகப் பற்றிக் கொள்ளுகின்றன. பின்பு, ஆண் பூச்சிகளை யத்துணிகளினின்றும் எடுத்துப் பறந்து போம்படி விட்டுப் பெண்பூச்சிகளை மூன்று நாட்களுக்கு முட்டையிட விடுவார்கள். பின்பு அம்முட்டைகளை ஒரு சிறு துண்டில் ஒன் ருகக்கூட்டி வீட்டுக் கூரைகளிற்றெங்க விடுவார்கள். இளம் முட்டைகள் பொரிய வாரம்பித்ததும் ஒரு அகன்ற மூங்கிற் கூடையின்மீது, அம்முட்டை கள் சேர்த்து வைக்கப்பெற்ற வஸ்திரத்தை மூடி. அக்கூடையினுட் புறத்தில் முன்கூறிய கொட்டைச் செடிகளின் தளிர்களைச் சிறுசிறு துண்டுகளாக வெட் டிப்பரப்பி அப்பூச்சிகளை உண்பிப்பர். பசுமையான கொட்டை இலைகளைப் பிறந்த உடனே விரும்புஞ் சுபாவமுள்ள அச்சிறு புழுக்கள் தளிர்களை யடைந்தவுடன் விரைந்து உண்ண வாரம்பிக்கின்றன. அவை அவ்வித இலை பரப்பப்பெற்ற வெவ்வேறு கூடைகளுக்கு அடிக்கடி மாற்றப் படுகின்றன. அப்புழுக்கள் கொட்டை இலைகளைத்தின்று வளர்ந்து நான்கு முறை தோலு ரிக்கின்றன. முதிர்ந்த புழுக்கள் வெண்மை யல்லது பசுமை நிறங்கொண்ட தாகவோ, புள்ளிகளுடனே அல்லது புள்ளிகளில்லாமலோ இருக்கின்றன. அப்புழுக்கள் முதிர்ச்சி யடைந்தவுடன் ஊர்ந்து மெல்ல அக்கூடைகளின் மேற்பாகத்தை யடைகின்றன. வாழையிலைச் சருகுக் கட்டுகளைக் கூரை யினின்று தொங்கவிட்டு அப்புழுக்களை அச்சருகுகளிலிருக்க விடுகின்றனர். அங்கு அப்பூச்சிகள் நூற்க வாரம்பித்து மூன்று முதல் ஆறு நாட்களில் பட் டைகளைப் பூர்த்தி செய்கின்றன. முடிவாக அவை ஒன்றுசேர்த்துக் கூட் டப்பெற்று, சூரிய வெப்பம் படும்படி வைக்கப் படுகின்றன. இந்த ஈரிப்பட்ட டைகள் பருமாணத்திலும், தாக்கிலும், மூகாப்பட்டைகளை விடக்குறைந்த தாயிருப்பதுமன்றி, ஆசுமணையில் வைத்துத் திரிவட்முறுக்கிடக் கஷ்டமான தாயிருக்கிறது. ஈரிப்பட்டின் நெருங்கிய இழைகள் ஏனைய மல்பரி, தாசர் பட்டுகளைவிட உறுதியும், காலம் நீடித்து உபயோகப் படுத்தக்கூடியதாயு மிருக்கும். மற்ற பட்டுகளைவிட ஈரிப்பட்டு அதிக மதிப்புள்ளது; அதுவே யாவராலும் போற்றப்பட்டுக் கொள்முதல் செய்யப்படுவது. இவ்வித ஈரிப் பூச்சிகள் சுலபமாக வளர்க்கப் படலாமாதலாலும், அவற்றிற்குத் தேவையான உணவு கொட்டைச் செடியின் இலைகளே யாதலாலும், அதனைத் தொழிலபி விருத்தியில் ஊக்க முடையார் சொற்ப மூலத்தைக்கொண்டு விருத்திசெய்ய லாம்.

## நோயும் விரோதிகளும்.

கொட்டைச் செடியினிலைகளைத் தின்று வளரும் பட்டுப் பூச்சிகளுக்கு, கிருமிகள் சம்பந்தமான பல வியாதிகள் பரவித்துன்பம் விளைவித்தலியல்பு. எலி, சுண்டெலி, எறும்பு, கொசு, காகம், கழுகு, வெளவால், ஊர்க்குருவி முதலியவை இவற்றிற்குப் பெருந்துன்பங்களை விளைவிப்பன. ஈரிப்பட்டுப் புழுக்களே அநேகவித நோய்களுக்குப் பெரும்பாலும் உள்ளாவன. இவற்றல் அப்புழுக்களின் சட்டையுரித்தலுக்குத் தடை யேற்படக்கூடும்.

## நூற்றல்.

ஒரு முறுக்குள்ள பட்டுநூல் ஐந்து அல்லது ஆறு இழைகளை ஒன்ருக முறுக்கி நூற்கப்படும். பட்டுக் கூடுகளின் மேலடுக்கைவிடக் கீழடுக்குகள் சுற்றளவிலும், குறுக்களவிலும் சிறுத்திருக்கும். நாலைந்து பருத்த அடைகள் 6-7 சிறுத்த அடைகளின் குறுக்களவிற்குச் சமானமானவையா யிருக்கும்.

ஆண்டிற்கு இருமுறைகளுக்குமேல் கூடுவேயும் பட்டடைகள் 1½-முதல் 2½-வரை தொகையுள்ளதாகவும், பன்முறை கூடுவேயக் கூடியவை 2-முதல் 4-தொகையுள்ளதாகவு மிருக்கும். பொதுவாக கனமான புழுக்கூடுகள் பருமனான பட்டிழையையும் இலேசானவை மெலிவான-நுட்பமான இழைகளையுந் தருகின்றன. பின்வரும் அட்டவணை வேண்டிய தொகைக்கான கனமுள்ள அல்லது கனமில்லாத புழுக்கூடுகளின் கணக்குகளைத் தருகின்றது:—

| † A | B. | C. | | D. |
|---|---|---|---|---|
| 1½-2 | 8 | 3 | + | 2 |
| | 9 | 4 | ,, | 1 |
| | 10 | 5 | ,, | 0 |
| | 11 | 0 | ,, | 7 |
| | 12 | 4 | ,, | 3 |
| | 13 | 6 | ,, | 1 |
| | 14 | 5 | ,, | 3 |
| | 15 | 4 | ,, | 5 |
| | 16 | 8 | ,, | 0 |
| | 17 | 8 | ,, | 1 |
| | 18 | 7 | ,, | 3 |
| | 19 | 8 | ,, | 2 |
| | 20 | 3 | ,, | 10 |
| 2-2½ | 8 | 2 | ,, | 2 |
| | 9 | 3 | ,, | 1 |
| | 10 | 4 | ,, | 0 |
| | 10 | 0 | ,, | 5 |
| | 11 | 3 | ,, | 2 |
| | 12 | 5 | ,, | 0 |
| | 13 | 3 | ,, | 3 |
| | 14 | 4 | ,, | 2 |
| | 15 | 4 | ,, | 3 |
| 2½-3 | 8 | 2 | ,, | 2 |
| | 9 | 3 | ,, | 1 |
| | 10 | 3 | ,, | 2 |
| | 11 | 4 | ,, | 1 |
| | 12 | 4 | ,, | 2 |
| | 13 | 3 | ,, | 3 |
| | 14 | 4 | ,, | 3 |
| | 15 | 5 | ,, | 2 |

இவைபோற் பிறவும்.

## மறுமுறை நூற்றல்.

இவ்விதம் புழுக்கூடுகளை வரிசைப்படி உற்பத்திசெய்து ஒருமுறை நூற்றபின் இரண்டாம்முறை திருத்தமாக நூற்றுச் சுத்தமான இழைகளை யுண்டாக்க வேண்டும். வியாபார நிமித்தம் பிறநாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்படும் பட்டிற்கே இரண்டாவது முறை செய்யப்படும் நூற்றல் அவசியம். சாதாரண உபயோகத்திற்கான பட்டு அத்துணை சுத்தப்படுத்தப்படவேண்டியதில்லை. அமரிக்க, ஐரோப்பிய நாடுகளில் இத்தகை நயமானபட்டின் தேவை நாளுக்குநாள் அதிகரித்துக் கொண்டே வருகின்றது. வங்காள இராட்டையினுதவி கொண்டு மறுமுறை நூற்றலை நன்றாகச் செய்யக்கூடும். சிறுவர்களும் ஒரே நடவையில் மூன்று நான்கு கண்டுகளை வெகுசீக்கிரத்தில் நூற்கப் பயிற்சி செய்யப்படலாம். அதாவது ஒருகண்டுபட்டு (1) ஒரு சர்கி (இராட்டை) (2) கண்டின் ஒரு முனையில் ஒரு சிறு கொக்கி (3) யின் (Hook) வழியாகத் தள்ளு இயந்திரத்தில் பொருத்தப்பட்டு, கைப்பிடியுள்ள சுழற்சக்கரத்தில் முடிபோடப்படுதலாம். (4) இப்பொழுது அந்த சுழற் சக்கரத்தைச் சுற்றினால் பட்டிழைகள் முறுக்கேறுகின்றன. இராட்டை (சர்கி)யிலிருந்து இழை மூன்று கிளையாக வந்துகொண்டே யிருக்கிறது.

## பட்டின் ரசாயன உபயோகம்.

இயற்கையான பட்டிழையைப் பூதக் கண்ணாடியைக் கொண்டும், ரசாயனப் பொருள்களைக் கொண்டும் சோதித்துப் பார்க்குங்கால், அதில் முக்கியமாக 'பைப்ரோயின்' (Fibroin) என்ற பட்டின் பிரதான ரஸாயன வஸ்துவும், 'செரிசின்' (Serecin) என்னும் மற்றொரு மத்திம ரசாயன வஸ்துவும் கலந்திருக்கின்றன வென்று தெரிகின்றது.

---

† A. ஒரு கூட்டின் தொகை. B. வேண்டிய முரட்டுப் பட்டின் தொகை. C. விலக்கவேண்டிய பருத்த புழுக்கூடுகளின் எண். D. விலக்கவேண்டிய சிறு புழுக்கூடுகளின் எண்.

இவ்விரண்டு ரசாயன பதார்த்தங்களிலும், அங்காரம் (Carbon) ஜலகரம், Hydrogen) நார்த்தஜனி (Nitrogen) ஓஷஜனி (Oxygen) என்பவை கலந்திருக்கின்றன. 'பைபுரோயினை' விட, 'செரிசினில் ஜலகரமும் ஓஷஜனியும் அதிகமாகவே கலந்திருக்கின்றன. இதைத்தவிர வெகு சிறு பச்சை போன்ற இலேசான வர்ணங்கலந்த ஒரு பதார்த்தமும் பட்டிழையிற் பொருந்தி யிருக்கின்றது; 'செரிசின்' பட்டுக்கூடுகளின் மேற்பாகத்திற் காணப்படுகின்றது. இது பட்டுப் பசையென்ற பொதுப்பெயர் பெறும்.

இந் நாறு போன்ற பட்டடைகளைக் கொதிநீரிலிட்டுக் காய்ச்சிய பின்னர் பரிசுத்தமான பட்டாக அவை மாறுகின்றன. இப்பொழுது இவை பசை நீங்கி, பவளவர்ண அழகு, மெதுத்தன்மை, பளபளப்பு முதலியவற்றைபெய்தும். அப்பட்டுடன் தோன்றிய ஆபாசப் பட்டங்கள் யாவும் இப்பொழுது முற்றிலும் நீங்கும்.

முடிவுரை.

நூற்றுக்குத் தொண்ணூறு ஜனங்கள், கைத்தொழில் விருத்தியுள்ள பாரத நாட்டில் இத்தகைய உயர்ந்த கைத்தொழிற் பெருக்கு மிகுமேல் நாடு செழிப்பதுமன்றி, விலையுயர்ந்த பட்டாடைகளை உற்பத்தி செய்வதால் மிடிமை விரைவில் நீங்கி அதிகப் பொருளீட்ட வழியுண்டாம். பட்டு உற்பத்தி இலாக்காவிலுள்ள கைத்தொழில் நிபுணர்கள் (உத்தியோகஸ்தர்கள்) ஒன்றுகூடி ஒரு கழகத்தமர்ந்து இக்கைத்தொழிற் கல்வியைப் பெருக்க முயற்சிப்பார்களாயின் ஜப்பான் தேசத்தைப் போலத் தப்பாது விரைவில் நாம் மேன்மை யடைவோம். அரசாங்கத்தாரும் ஏற்றுமதி இறக்குமதி வரிகளைக் குறைத்து இவ்விஷயத்தில் ஜனங்களை ஊக்கி, உதவிபுரிய வேண்டும். இதனால் இயற்கைப் பட்டு உற்பத்தி செய்யும் விதம் விளக்கப்பட்டது. (இண்டஸ்டிரி)

(தொடரும்) S. V. வரதராஜையங்கார், உறையூர்.

# ஸ்ரீமதி சாரதாமணி தேவியார்.

(279-ம் பக்கத் தொடர்ச்சி.)

ஸ்ரீமதி சாரதாமணி தேவியார் பாணிஹாதி உற்சவத்திற்கு ஸ்ரீராம கிருஷ்ணர் அன்புடன் விடை தராமையால் போகவில்லை. இவருக்கு கூச்சம். இவர் கணவனுரை உபசரிப்பதிலும் அவரை நாடி வருபவர்களுக்குச் சமையல் செய்வதிலும் மூழ்கியிருப்பார்; விடியற்காலை மூன்று மணிக்கே எழுந்து காலைக் கடன் முடித்துத் தம் அறைக்குச் செல்வர்; வேலைசெய்வதிலோ இவர் சுறுசுறுப்புள்ளவர்; ஓய்வு நேரங்களில் கடவுளைத் தியானிப்பர். இவர்கள் பாகுல் தாலாவில் தங்கி யிருந்தபோது தேவியார் ஒருநாள் ஆற்றில் ஸ்நானஞ் செய்யப் படிக்கட்டுகளினின்று இறங்கினார். அங்கு படுத்துக் கொண்டிருந்த முதலை இவர் காலடிச் சத்தங்கேட்டு நீரில் மூழ்கிச் சென்றுவிட்டது. இவர் தெய்வாதீனமாய்த் தப்பிவிட்டுக் கொண்டார். அதுமுதல் விளக்கில்லாமல் குளிக்கப் போவதில்லை. ஸ்ரீ ராம கிருஷ்ணருக்குக் கட்டி உண்டாய் அதைச் சொஸ்தப் படுத்திக் கொள்வதற்காக ஷ்யாம்புகூருக்கு வந்திருந்தார். அம்மையாரும் அவருடன் வந்து தம்மாலான உதவி செய்தார். தம் சொந்த சௌகரியங்களையும் கவனிக்கவில்லை; அவ்விடத்தில் இருந்தபோது தேவியார் இரவு பதி

ஞொரு மணியிலிருந்து காலை இரண்டுமணி வரைக்குந்தான் தூங்குவது வழக்கம். இவர் ஸ்திரீயாயிருந்தாலும தைரியத்தையும் மனோ உற்சாகத்தையும் கஷ்டகாலங்களில் விடாமல் அணிகலனாகக் கொண்டிருப்பர். இதைப்பற்றிப் பின்வரும் விஷயம் சான்று பகரும். அது வருமாறு:— "ஸ்ரீமதி சாரதாமணி தேவியார் காமார்புகூர் அல்லது ஜெயராம பதியிலிருந்து தக்ஷிணேஸ்வரதிற்கு அடிக்கடி செல்ல வேண்டியதாயிற்று; அந்தப்பாதையானது தெலாப்ஹிலோ, கைகாலா என்னுமிடங்களைச்சேர்ந்த வயல்களின் மத்தியில் இருந்தது. அக்காலத்தில் இவ்வழிகளில் திருடர்களும் கொலையாளிகளும் அதிகமாயிருந்தார்கள். இன்றைக்கும் அவ்வயல்களின் மத்தியில் ஒரு காளி கோயிலுண்டு. இதிலுள்ள தேவதையைத் தெலாப்ஹிலோவைச் சேர்ந்த திருடர்களின் காளி என்று கூறி வருகிறார்கள். திருடர்கள் கொள்ளை யடிக்கப் போகுமுன்னும் கொலைசெய்யப் போகுமுன்னும இக்காளியைப் பிரார்த்தித்துக் கொண்டு செல்வது வழக்கம் அக்காலத்தில் இவ்வழியாய் ஜனங்கள் கூட்டங் கூட்டமாய்ச் செல்வாரகளே யல்லாமல் தனித்துச் செல்லவே மாட்டார்கள்.

ஒரு சந்தர்ப்பத்தில் தேவியார் காமார்புகூரிலிருந்து ஸ்ரீராமகிருஷ்ணருடைய பந்துக்களுடனும் இன்னும் சிலருடனும் சேர்ந்து தக்ஷிணேஸ்வரத்திற்கு வந்து ஆரம்பாக் எனுமிடத்தைச் சேர்ந்தார்; பொழுது சாய்வதற்கு இன்னும் நீண்ட நேரமிருக்கிறதெனறு கருதி அவ்விடத்தினின்று மேலே சொல்லப்பட்ட வயல்களைத் தாண்டிச் சென்றுவிடத் தீர்மானித்து அதன் படியே செய்யலானார். தேவியார் நடந்துவந்ததன் பயனாய்க்களைத்துவிட்டாலும், கூடவந்தவர்களுடன் நடந்துவரவே ஒப்புக்கொண்டார். ஆனால் களைப்பின் பயனாய் மெல்லமெல்ல நடந்துகொண்டு போனார். அவருடன சென்றவர்களும் அவருக்காக நின்றுநின்று சென்று, இப்படி நடந்தால் பொழுது போகுமுன் அவ்விடத்தைவிட்டு அகல முடியாதென்றும், திருடர் வசம் சிக்க நேரிடுமென்றும கூறினார்கள். இதைக்கேட்ட தேவியார் ஒருவரும் தமக்காகக் காகக வேண்ட மென்றும், தாம் தாரகேஸ்வர சத்திரததில் அவர்களைச் சந்திப்பதாகவும சொல்லி அனுப்பிவிட்டார். அவர்களும் வேகமாய் நடந்து அம்மையாருடைய கண்ணுககுத் தெரியாத தூரம்வரை சென்றார்கள். அம்மையாரும் வேகமாய் நடக்கப்பார்த்தார்; களைப்பால் நடக்க முடியவில்லை; மெதுவாகவே நடந்து அப்பாதையின் பாதிவழி செல்வதற்குள் இருள் அதிகரித்து விட்டது. அப்போது உயரமான மனிதனொருவன் புஜத்தில் தடியோடு மற்றொரு மனிதனுடன் எதிரே வந்தான். அம்மையார் மனோ தைரியத்துடன் அசைவற்று நின்றார். வந்த மனிதன் அம்மையாரை 'இநநள்ளிரவில் தன்னந் தனியாய் இங்கு நிற்பது யார்? என்று உரததுக் கேட்டான், அம்மையார் சாந்தமாய் அவனைப் பார்த்து 'தகப்பனே! என்னுடன் வந்தவர்கள் என்னை விட்டுவிட்டுச் சென்றனர். நான் வழிதவறி விட்டேன். என்னை அவர்கள் இருக்குமிடங்கொண்டுபோய்ச் சேர்ப்பீராக. உமது மருமகப்பிள்ளை தக்ஷிணேஸ்வரத்திலுள்ள ராணிராஷ்மாணி காளி கோயிலில் இருககிறார். நான் அவரைச் சந்திக்கவேண்டும். தாங்கள் என்னை அங்கு அழைததுச் சென்றால் அவர் தங்களுக்கு அதிக நன்றியறித லுள்ளவராயிருப்பார்' என்று கூறினார். அதற்குள் இரணடாவது மனிதனும் சமீபித்தான். சமீபித்தவன் அம்மையார் எண்ணியபடி ஆண் அல்ல; அவரை வினவிய திருடனின் மனைவியே. இதைக்கண்ட அம்மையார் மிகவும் சந்தோஷங்கொண்டு அந்த ஸ்திரீயின் கையைப் பிடித்துக்கொண்டு 'தாயே நான் உன்னுடைய குமாரத்தியாகிய சாரதா. என்னுடன் வந்தவர்கள் போய்

விட்டபடியால் நான் வழிதப்பி விட்டேன்; நற்கால வசமாய்த் தகப்பனும் தாங்களும் என்னைச் சந்தித்தீர்கள். இல்லாவிட்டால் என்னுடையகதி யாதாமோ!' என்று கூறினார்.

அவர்கள் இருவரும் தாழ்ந்த வகுப்பினர். அவர்கள் ஜாதிமத வித்தியா சங்களையெல்லாம்விட்டு, தேவியாரைத் தங்கள் குமாரத்தியாகப் பாவித்து, களைப்புற்றிருந்த அவரை நீண்ட தூரம் நடக்க வைக்காமல் அருகிலிருந்த ஒருகிராமத்தில் அன்றைய இரவைக் கழிக்கவைத்தனர். திருடன் மனைவி தன் துணியை விரித்துப்போட்டு அதில் அம்மையாரைப் படுக்க வைத்தாள். திருடன் அருகிலிருந்த கடைக்குச் சென்று சோற்றை வாங்கிவந்து சாப் பிடும்படி அவரை உபசரித்தான். பொழுது புலர்ந்ததும் தேவியாரை அவ் விருவரும் தாரகேஸ்வரத்திலிருந்த கடைக்கு அழைத்துச் சென்று அங்கு களையாற்றினார்கள். திருடனுடைய மனைவி அவனைப் பார்த்து 'ஐயனே! என்னுடைய குமாரத்தி நேற்றிரவு கொஞ்சமாகத்தான் சாப்பிட்டாள். கோயிலில் சீக்கிரமாய்ப் பூஜையை முடித்துவிட்டுக் கடைக்குச்சென்று மச் சத்தையும், கீரைகிறுசுகளையும் வாங்கிக்கொண்டு வாரும். இன்றைக்கு அவ ளுக்கு நல்ல சாப்பாடு போடவேண்டும்' என்றாள்.

உடனே அவன் வெளியே சென்றதும் முன்னம் தேவியாருடன் வந்த வர்கள், அவர் தங்கிய இடத்திற்கு வரலானார்கள்; அவரைக்கண்டு ஆனந்தித் தார்கள். தேவியார், தன்னைக் காப்பாற்றிய பெற்றோர்களை அவர்களுக்கு அறிமுகப்படுத்தினார். பிறகு திருடனும் அவன் மனைவியும் அவரிடம் விடை பெற்றுத் தம்மிடஞ் சென்றனர். தேவியார், அவர்களை யன்புடன் அனுப்பி னார். இதைப்பற்றித் தேவியார் "ஓர் இரவு நான் அவர்களுடன் தங்கியிருந் தாலும் எங்களுக்குள் ஏற்பட்ட அன்பு அளவு கடந்தது. அவர்கள் மறுநாள் காலையில் என்னைவிட்டுச் செல்லுகையில், என்னை அறியாமலே நான் அழ ஆரம்பித்தேன். அவர்கள் என்னை மறுபடியும் தக்ஷிணேஸ்வரத்தில் வந்து பார்ப்பதாக வாக்குறுதி கொடுத்த பின்னரே அவர்கள் என்னைவிட்டுப் பிரிய இடங்கொடுத்தேன். அவர்கள் என்னுடன் நீண்டதூரம் தொடர்ந்து வந் தார்கள். அந்த ஸ்திரீ சாலையில் கிடந்த சில பட்டாணிகளைப் பொறுக்கி என் முன்றானையில் கட்டி அழுதவிதமாய் 'தாயே சாரதா! இராத்திரியில் அன்னமுண்ணும்போது பட்டாணியையும் சேர்த்துச் சாப்பிடு' என்றாள். அவர்கள் பின்பு அநேகதடவைகளில் என்னைத் தக்ஷிணேஸ்வரத்தில் சந்தித் துப் போவது வழக்கம். வரும்போதெல்லாம் ஏதாவது வெகுமதி கொண்டு வந்து கொடுப்பார்கள். என் கணவரும் இச்சமாசாரங்களை அறிந்து அவர் களை நன்றாய் உபசரித்தனுப்புவார். என்னை ஆதரித்த அந்தத் தாழ்ந்த வகுப் புத் தகப்பனார் ஒன்றிரண்டு தடவைகளில் திருட்டுத் தொழிலில் பிரவர்த் தித்திருக்கிறார் என்றே நான் எண்ணிவந்தேன்" என்று கூறுவார்.

வங்காளி 1293-ம் வருஷத்தில் சிராவணமாதத்தில் ஸ்ரீ இராம கிருஷ் ணர் விண்ணுலகு ஏகினார். அப்போது ஸ்ரீமதி சாரதாமணி தேவியாருக்கு வயது முப்பத்து மூன்று. புருஷன் இறந்தபின் தேவியார் விதவைக்குரிய கோலங் கொள்ளவில்லை யென்பது தெரிகிறது. இதைப்பற்றி ஒரு நண்பர் தெரிவிப்பதாவது:—

'ஸ்ரீராம கிருஷ்ணர் இறந்த பிற்பாடு ஸ்ரீமதி தேவியார் தம் கையி லிருந்த வளையல்களைக் கழற்ற முயற்சித்தார். அப்போது ஸ்ரீராம கிருஷ்ணர் இளவயதுடன் கூடியவராய்த் தோன்றி அவருடைய கையைப் பிடித்து 'நான்

இறந்து விட்டேன் என்று உன்கை வளையல்களைக் கழற்றிவிடுகிறாய்'? என்று கேட்டார். பிறகு தேவியார் கையிலிருந்த வளையல்களைக் கழற்றவேயில்லை; வளையலோடு கப்புக்கரைகொண்ட துணியை அணிந்து கொண்டிருந்தார்' என்பதே.

ஆத்மா இறக்கிறதில்லை யென்ற நம்பிக்கையை ஒவ்வொருவரும் கொண்டால் உலகத்தில் இப்போதுள்ள கஷ்டங்களும் பாபச் செயல்களும் பிறவும் ஒழியும்.

ஸ்ரீராம கிருஷ்ணருக்குப்பின் ஸ்ரீமதி தேவியார் முப்பத்திரண்டு ஆண்டுகள் வரை பிழைத்திருந்தார். அவர் வங்காளி 1327-ம் வருஷத்தில் இவ்வுலக வாழ்க்கையை நீத்தார். அவர் இறந்தபின் அவருடைய குணாதிசயங்களைப் புகழ்ந்து வங்காளி மாதப் பத்திரிகையான உத்போதன், "ஸ்ரீராம கிருஷ்ணரது சீடர்களும் இவ்வம்மையாரது சீடர்களும் இவரை 'மாதா' என்றே அழைப்பது வழக்கம். இப்போது அங்ஙனமே கூறி வருகிறார்கள். " என்று கூறுகின்றது. ஸ்ரீமதி தேவியாரின் நாமதேயம் என்றைக்கும் நிலைத்திருப்பதாக.

A. துரை.




1. தேள் கொட்டுக்கு:—நீளமான ஓர் துணியை எடுத்து, மண்ணெண்ணெயில் தோய்த்துக் கடிவாயில் சுற்றக் குணமாகும். அல்லது கடிவாயில் Tincture oil (டின்க்சர் ஆயில்) வைத்தால் 5-நிமிஷத்தில் குணமாகும்.

2. பாம்புகடிக்கு:—பாம்பு கடிக்கப் பெற்றவன் எருக்கம்பூ 5-10 வரை வாயில் போட்டு மென்றுட்கொள்ள விஷம் நீங்கிக் குணப்படும்.

3. Diamonds to test:—வைரக்கற்களைப் பரீக்ஷித்துப்பார்க்க:—ஓர் (Card) அட்டையில் ஊசியால் ஒருசிறு துவாரம் செய்யவேண்டும். பிறகு வயிரத்தின் மூலமாய், கார்டைப் பார்க்கவேண்டும். அது பொய் வயிரமாயின் கார்டில் இரண்டு துவாரம் தெரியும். உண்மையானதாயின் ஒரே துவாரம் தான் தெரியும்.

4. மீன் பிடிக்க ரகசிய வழி :—கொஞ்சம் (Oil of Rhodium) ரோஹிடியம் என்ற எண்ணெயைத் தூண்டிலில் தடவி மீன் பிடிக்க, மீன் வெகு லகுவாய் அகப்படும்.

5. இராக்காலங்களில் சொப்பனம் வாராதிருக்க:—இராத்திரி படுக்கைக்குப் போய் உட்கார்ந்து, நாம் நமது வலப்பாதத்தை ஆள்காட்டி விரலால் தேய்த்து நெற்றியில் வைத்துக் கொண்டால் சொப்பனம் (கனவு) காணமாட்டோம்.

Bandy. ராமானுஜம்.

---

*

# ஆரம்ப ஆசிரியன்.

பெறற்கரிய மானிடப் பிறவியைப் பெற்றதின் பயன் பகவானைப்போற்று வதேயாம். "என்னே மற்றிவ் வுடம்புபெற்றும் அற நினையார்" என்றார் நாலடியாரும். ஆகவே எத்தொழிலைச் செய்தாலும் எதவத்தைப்பட்டாலும் எம்பிரானை இறைஞ்சுதலே இப்பிறவியின் பேறு என ஒவ்வொரு மானிடரும் உணர வேண்டும்.

ஆனால் நாம் மாயையின் மயக்கால் மதிமருண்டு, தன்னலங்கருதி, கேவலம் ஜீவனார்த்தத்தின் நிமித்தம் ஓர் தொழிலில் ஈடுபட்டு, பாசபந்தத்தில் சிக்கி, பொய்யாம் வாழ்க்கையை மெய்யென நம்பி, மயக்கமுறுகிறோம்; என்றாலும் ஜீவனார்த்தத்தின் நிமித்தம் ஓர் தொழிலில் ஈடுபடும்போது அத்தொழிலும் ஆத்மார்த்தமானதா யிருந்தால், அம்மயக்கை மாய்க்கலாம். ஒருவனது நடக்கைக்குச் சேர்க்கை காரணமா யிருப்பதுபோல், பாசபந்தத்தால் கட்டுண்டுழலும் நமக்கு, இறைவனுடைய இன்னருளைப்பெற, நம் தொழிலும் ஆத்மார்த்தமானதா யிருத்தல் அவசியம்.

அத்தகைய ஆத்மார்த்தத்தை அளிக்கவல்லது, ஆரம்ப ஆசிரியத் தொழிலே என்னலாம்.

உலகத்திலுள்ள சகல ஜீவராசிகளிலும் மனிதனே சிரேஷ்டனாகின்றான். காரணம், ஆறறிவென்னும்பகுத்தறிவை, பகவான் அவனுக்கு அருளியிப்பதே. அந்தப் பகுத்தறிவை விகசிதப்படுத்தும் தொழில் ஆரம்ப ஆசிரியனுடையதா யிருக்கின்றது. உதாரணமாக:— உலகஞானமே அறியாத, அஞ்ஞானமாகிற அந்தகாரத்தைக்கொண்ட ஓர்சுதன், அறிவில் விர்த்தியடைய ஓர் ஆரம்ப ஆசிரியன் வசம் ஒப்புவிக்கப்படுகிறான். உடனே அவ்வாரம்ப ஆசிரியன் தன்வசம் விடப்பட்டிருக்கும், அக்குழந்தையின் மனோபாவத்தை அறிந்து, அதற்கேற்றவாறு தன் மனோபாவத்தை மாற்றிக் கொள்கிறான். இப்பொழுது, அவ்விருவரின் மனோ பாவங்களும் ஒன்றே. ஆதலால் ஆசிரியன் வசம் ஒப்புவிக்கப் பட்டிருக்கும் குழந்தை, தன் ஆசானாகிய மற்றொரு குழந்தையோடு நேசிக்கத் தொடங்குகிறான். ஆசானாகிய குழந்தை மெல்ல மெல்ல அக்குழந்தையின் முழு கவனமும் தன் வசம் ஆகும்படி அவனுடன் விளையாடத் தொடங்குகிறான். உடனே ஒப்புவிக்கப்பட்ட குழந்தையும், தன் இயற்கை விளையாட்டைக் கொண்டு, ஆசானாகிய குழந்தையுடன் விளையாட வாரம்பிக்கிறான். ஆனால் ஆசானாகிய குழந்தையின் விளையாட்டைப்போல் தன் விளையாட்டு இல்லாததைக்கண்டு, அக்குழந்தை ஆசானது விளையாட்டின் தத்துவத்தைக் கேட்கத் தொடங்குகிறான். ஆசானாகிய குழந்தை இதுதான் தருணமென்று, அக்குழந்தையின் வினாக்களுக்குத தக்கவாறு தன் விளையாட்டின் தத்துவத்தைப் போதித்து வருகிறான்.

இவ்வாறாக அவ்வாரம்ப ஆசிரியன் நாளுக்குநாள் அக்குழந்தையின் மனோ பாவங்களுக்கேற்றவாறு, தன்னை (தன்னிலையை)த்திருத்திக் கொண்டு அக்குழந்தையின் பகுத்தறிவென்னும் சுடர் விளக்கைத் தூண்டத் தான்ஓர் தூண்டு கோலாகின்றான்.

குலாலன் பிருதிவியைக் கொண்டு பிரமிப்புறும் பிம்பங்கள் செய்வது போல், ஆரம்ப ஆசிரியன், சாந்தாகார சொரூபத்துடனிருந்து இளஞ்சிறார்களின் இயற்கையான பால்ய விகாரங்களைப் போக்கி, சன்மார்க்க நெறியை

யூட்டி, அவர்களைச் சத்புத்ரரென விளங்கச் செய்கிறான். இன்னும் மாணாக்கர்கள் தலை, இடை, கடையென மூவகையினரா யிருத்தலால் அவரவர்க்கேற்றவண்ணம் தன்னறிவைக் கொண்டு போதிப்பதில் ஆரம்ப ஆசிரியன் விசேஷ ஆற்றலுடையவனாகின்றான்.

இத்யாதி உன்னத இலக்ஷியங்கொண்ட ஆரம்பஆசிரியரின் தற்போதைய நிலைமை மிக்க பரிதபிக்கக் கூடியதா யிருக்கிறது. அவர்கள் கேவலம் தங்கள் தொழிலைத் தாங்களே கூறிக்கொள்ள வெட்கப்படுவதுடன், "கீழ்தர உத்யோகஸ்தர்" களாகவும் அதிகார வர்க்கத்தினரால் ஆளப்பட்டு வருகிறார்கள். உதாரணமாக ஓர்தாலுக்கா போர்டுக்குட்பட்ட ஓர்பாடசாலையின் ஆரம்ப ஆசிரியன் அப்போர்டுக்குட்பட்ட ஒவ்வொரு பிரஜைக்கும், அடிமையாயிருக்க வேண்டுமாம். இன்றேல் அவ்வாசிரியனை "பொதுஜன மதிப்பிற்குரியவன் அல்லன்" என்று போர்டார் கருதி வேலையினின்று நீக்குதல் அல்லது ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்கு மாற்றுதல் முதலான நடவடிக்கைகளை அவன் விஷயத்தில் கையாளத் தொடங்குகின்றனர். அந்தோ! இத்தகைய போர்டாரின் அதிகாரத்தைக் கேட்க ஆசிரியரின் மனம் ஊசலாடுகின்றது.

ஆரம்ப ஆசிரியர்களின் உயரிய இலக்ஷியங்களை நம் முன்னோர் நன்குணர்ந்து அவர்களைக் கண்ணியமாய் நடத்தி வந்தார்கள். அதனால் அக்காலத்தில் அவர்களுக்கு விசேஷ கௌரவமும், மதிப்பும், செல்வாக்கும் ஏற்பட்டிருந்தன.

ஆரம்ப ஆசிரியரின் உன்னத இலக்ஷியங்களை ஆழ்ந்த நோக்குடன் ஆராய்வார்க்கு, அவர்கள், ஆரம்பக் கல்வியின் ஆவசியகத்திற்கு எத்தகைய பொறுப்புடன் அடிகோலியராய் விளங்குகின்றனரென்பது புலனாகாமற் போகாது. ஆரம்பக் கல்வியின் அபிவிருத்திக்குப் பாடுபடும்போது, ஆரம்ப ஆசிரியன் அபிவிருத்திக்கும் பாடுபடவேண்டிய தவசியம்மென்பதை அரசாங்கத்தார் நன்கு உணரவேண்டும்.

"பொன்னிறச் செந்நெல் பொதியொடு பீள்வாட
மின்னொளிர் வானம் கடலுள்ளும் கான்றுகக்கும்"

என்றபடி, உலகத்துக்கே அத்யாவஸ்யமான கல்விக்கு அச்சாணியாய் விளங்கும் ஆரம்ப ஆசிரியரை அல்லற்பட விட்டு, மற்ற ராஜீய ஆடம்பரங்களுக்கு, ஏராளமாய்ப் பணத்தை அள்ளி, அள்ளி அழிக்கின்றனர் அரசாங்கத்தார். ஒருவர் ஓர் காரியஞ்செய்து முடிக்க முயலும்போது, நாட்டத்தையும் ஊக்கத்தையும் அவர்கள் அக்காரியத்தில் செலுத்தினால் மாத்திரம் அஃது முட்டின்றி முடிவுபெறும். அஃதேபோல், பால்மணமாறாத பாலகர்க்குப் போதிக்குந்தொழிலையே மேற்கொண்ட ஆரம்ப ஆசிரியரும், தம் சிந்தையைப் பல விடங்களில் செல்ல விடாமல், ஒரு நிலையில் நிறுத்திப் போதித்தால் மாத்திரம் ஆரம்பக் கல்வி மணத்துடன் மலர்ந்து பரிமளிக்கும்.

ஆகவே சட்ட சபையிலுள்ள நம் ஜில்லா தலைவர்களும், ஏனையரும், ஆரம்ப ஆசிரியரின் அபிவிருத்திக்காக, விசேஷ ஏற்பாடுகள் செய்வார்களென ஆசிரியர்கள் எதிர்பார்க்கிறார்கள். எல்லாம் வல்ல இறைவன் அனுக்கிரஹிப்பாராக.

A. S. நரசிம்மன்.

# கோவில்களும் அவைகளின் பாதுகாப்பும்.

நமது நாட்டில் வெகுகாலந்தொட்டுக் கணக்கற்ற மதநிலையங்கள் ஆங்காங்கு தமிழ் அரசர்களாலும், பிரபுக்களாலும், மதாபிமானம் நிறைந்த செல்வர்களாலும் நிறுவப்பெற்றுள்ளன. அவைகள் சிலகாலமாகப் பல காரணங்களால் போற்றப் பெறாது பழுதடைந்து மிக்க ஜீரண ஸ்திதியி லிருக்க நாம் காண்கிறோம். புராதன நிலையங்களின் பாதுகாப்புச் சட்டத்திற் குட்பட்டு (Preservation for Ancient Monuments Act of 1904) மராமத்து இலாக்காவின் ஆதரவின் கீழிருப்பவை தவிர மற்றும் சில பெரும் மதநிலையங்களை நமது ஆரிய தன வைசிய சிகாமணிகள் பார்க்கச் சகியாது அவற்றின் திருப்பணிகளை ஏற்றுக்கொண்டு, ஆயிரம், பதினாயிரம், இலட்சக்கணக்காகப் பணஞ் செலவிட்டு, அவைகளைப் புதுப்பித்திருக்கிறார்கள். இன்னும் புதுப்பித்தும் வருகிறார்கள். இவர்களுடைய அரும் பெரும் செய்கை ஒருபுறமிருக்க, மற்ற கோவில்கள் பல காரணங்களால் நாடோறும் பழுதடைந்து வருவது மிக்க விசனிக்கத்தக்கது. தருமகர்த்தாக்களின் நாளடைவான போதிய கவனிப்பின்மையாலும், வருடந்தோறும் உண்டாகும் மராமத்துக்களைச் செய்யாதிருத்தலாலும், கோயில், மண்டபம், கோபுரம், மதில்கள் இவற்றின்மீது வளர்ந்து வரும் செடிகளை அவ்வப்போது வேருடன் களையாது விட்டுவிட்டமையாலும் அச்செடிகள் ஷை கட்டிடங்களைப் பழுதாகும் நிலைக்குக் கொண்டுவந்திருக்கின்றன. அற்பமாக எண்ணப்படும் இச்செடிகளின் வேர்கள் கட்டிடங்களைப் பாளம் பாளமாக வெடிக்கச் செய்தும் கோவில்கள் பலவற்றை நாசமாக்கியுமிருக்க நாம் கண்டிருக்கிறோம். இக்கொடிய செடிகளை அறவே களைவது தருமகர்த்தாக்களின் சிறந்ததொரு கடமையாகும். இதுவிஷயமாகச் சமீபத்தில் அரசாங்க விவசாய ரசாயன சாஸ்திரியாரவர்களை வினவல் நேர்ந்தது. அதற்கவர் கீழ்க்கண்ட முறையை அனுசரித்தால் அவைகளைத் தடுக்கலாமென்று கூறுகின்றனர்.

அதாவது, மரத்தின் வேர்கள் பலதுற்றில் துவாரமிட்டு அதனுள் (Mercury) ரசத்தையாவது (Sodium Arsonate) பாஷாணத்தையாவது நிறைத்து மெழுகினால் அடைத்துவிட்டால் விரைவில் செடிகளும் மரங்களும் பட்டுப்போகு மென்பதாம். இதனைத் தருமகர்த்தாக்கள் கையாண்டு கோவில்களைப் பழுதின்றிப் பரிபாலிக்கும் திருப்பணியை ஏற்றுக்கொள்வார்களாக. பழமையான இந்துமத நிலையங்கள் இப்போதிருக்கும் சீர்கேடான தன்மையைக் கவனியாது வேறு புதியவைகளைப் பெருமுயற்சி செய்து கட்டுவதிற் பயனென்? ஏற்கனவே இருப்பவைகளைப் பொன்னே போற்போற்றி, சிறப்பித்து அவைகளால் பெரும்பயனை அடைவதே நன்மையாகும். திருப்பணியில் சிந்தனையுள்ள செல்வர்கள் மேற்கண்ட முறையை அனுசரிப்பதோடு மற்றும் பல விதத்திலும் தமது மதநிலையங்கள் நன்னிலையடையும் வழியைக் கவனிப்பார்களாக.

F. W. சோமசுந்தரம் பிள்ளை, B.A., B.L.

# அறிஞரின் அமுதமொழிகள்.

(281-ம் பக்கத் தொடர்ச்சி)

133. My conscience is my crown;
Contented thoughts my rest;
My heart is happy in itself;
My bliss is in my breast. *Southwell.*

என்னுடைய மனச்சாட்சியே எனக்குக் கிரீடம். என்னுடைய மன நிம்மதியே எனக்கு ஓய்வுநேரம். (அப்போது) என்னுடைய இருதயமானது தனக்குத்தானே மகிழ்கிறது; என்னுடைய பேரின்பம் (அத்தகைய) என் இருதயத்தில் அடங்கியுள்ளது. (சவுத்வெல்.)

134. My heart leaps up when I behold
A Rainbow in the sky;
So it was when my life began,
So it is now I am a man
So be it when I shall grow old
Or let me die! *Wordsworth.*

ஆகாயத்தில் இந்திரவில்லைக் காணும்போது என்னுடைய இருதயமானது புளகாங்கித மடைகின்றது. அதேபோல் என்னுடைய வாழ்க்கையின் ஆரம்பத்திலும் அது இருந்தது; மனிதனான இப்போதும் இருக்கிறது. நான் கிழவனாகி இறக்கும் வரை அங்ஙனமே இருக்கட்டும். (வோர்ட்ஸ்வோர்த்.)

135. Courage leads to heaven; fear to death.
*Seneca.*

தைரியம் மேல் உலகத்திற்கு வழிகாட்டுகிறது; பயம் சாவுக்கு வழிகாட்டுகிறது. (செனீகா)

A. P. இராமன், B. A.

---

1. For the protection of the Good
For the destruction of the evil doers
For the sake of firmly establishing righteousness
I am born from age to age. *Lord Krishna.*

எப்பொழுது தர்மம் குன்றி அதர்மம் அபிவிர்த்தி ஆகின்றதோ அப்பொழுது தர்மத்தை ஸ்தாபிப்பதற்காகவும், அதர்மத்தை அழிப்பதற்காகவும் நான் யுகத்திற்கு யுகம் அவதரிக்கிறேன்.
(கிருஷ்ணபராமாத்மா பகவத்கீதை.

2. No government can be a good government which has not the approval and support of the people. *Abdul Rasul.*

எந்த அரசாங்கம் குடிகளுடைய அங்கீகாரமும் ஒத்தாசையும் அடையவில்லையோ அது நீதியுள்ள அரசாங்கமாகாது.

(அப்துல் ரஸுல்.)

3. It has been ordained that a country can advance intellectually only, if its members practise the virtue of self-sacrifice. *Lala Lajapat Ray.*

எந்தத் தேசத்தின் குடிகள் சுயநலம் கருதாது தம் உயிரையும் ஒரு நல்ல காரியத்தின் பொருட்டு விட எண்ணியிருக்கின்றார்களோ அத்தேசமே முன்னேற்ற மடையும்.

(லாலாலஜபத்ராய்.)

4. Do yourself what you wish others to do. *Rama Krishna.*

பிறரைச் செய்யவேண்டுமென நினைப்பதை நீயே செய்துகொள்.

(ராமகிருஷ்ணு.)

5. Knowledge is power. *Bacon.*

புத்திமானே பலவானாவான். (பேகன்.)

6. The best school of discipline is home. *Smiles.*

நன்னடக்கை பயிலுவதற்கு உரிய இடம் இல்லமே. (ஸ்மைல்ஸ்.)

K. S. மணவாளன்.

---

# கவனிப்பீர்களா?

ஆம்! கவனிக்க வேண்டியதுதான். ஏனெனில் கீழே ஒரு புதுப்பேயைப் பற்றி வரைந்துள்ளோம். அப்பேய்க்கு "அச்சுப்பேய்" என்று பெயராகும். பார்ப்பவர் கண்களுக்கு மறைந்து வசிப்பதினாலேயே இதற்கு இப்பெயர் இடப்பெற்றது. இப்பேயைக் கண்டு பிடித்து அடக்கி ஆள்வது மனித சக்திக்குமீறிய செய்கையாகப் பலரால் கருதப் பெறுகிறது. அதாவது அச்சியற்றப் போவதற்குமுன் "பிழைகள் உண்டா?" என்று கையெழுத்துப் பிரதிகளைப் பல முறைகள் பார்வையிடினும் பிழைகள் புலப்படுவதில்லை. அச்சியற்றியபிறகு ஏதேனும் ஒன்றிரண்டு பிழைகளாவது இருந்து விடுகின்றன.

எழுத்துப் பிழைகள் நிறைந்த எவையும் எத்தகைய அழகுகளைப் பெற்றிருப்பினும் அவை அழகு பெற்றவையாகா. சிற்சில சிறு பிழைகள் ஆசிரியர்களின் கருத்துக்கு நேர்விரோதமாகவும் தோன்றி நிற்கின்றன. இன்னும் சில ஆபாசமானதும், பெரு மோசமானதுமான பொருளைக் கொடுத்து நிற்கின்றன. ஆகவே, அச்சுச்சாலை உரிமையாளர்களும், பத்திராசிரியர்களும், நூலாசிரியர்களும், முக்கியமாக எழுத்துக் கோப்போர்களும் இதைக் கவனிப்பார்களா? என்ற ஐயப் பாட்டுடன் இக்கட்டுரை வரைய நேர்ந்தது. அவர்கள் இக்கட்டுரையைக் கவனித்து, தவறு நேரிடாத வழிகளில் தமது வேலைகளைச்

செய்வார்களாயின், நமது நாட்டின் நலத்தைக் கவனித்தவர்களாவார்கள் என்பதே நமது எண்ணம்.

சில சிறிய பிழை பாடுகளால், எவ்வாறு படுமோசமான பொருள்கள் ஏற்பட்டு விடுகின்றன என்பதைக் கீழே மிகச் சுருக்கமாகக் கூறுகிறோம். இவற்றுள் பெரும்பான்மையானவைகள் கற்பனையாக எழுதப் பெற்றவை யல்லவென்பதையும், நாம் வாசித்த சில பொறுப்புவாய்ந்த பத்திரிகைகளி லும் புத்தகங்களிலும் உள்ள பிழைகளையே இங்குக் குறிப்பிடல் நேர்ந்தது என்பதையும் முதலில் அன்பர்களுக்குத் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

புள்ளி இல்லாமையால்,

| | | | |
|---|---|---|---|
| பெண் கல்வி | என்பது | பெண் கலவி | என்றும் |
| சக்தி அதிகம் | ,, | சகதி அதிகம் | ,, |
| தரும்படிவேண்டினன் | ,, | தருமபடி வேண்டினன். | |

புள்ளி மிகுதிப்படுவதால்,

| | | | |
|---|---|---|---|
| சமபந்திபோஜனம் | என்பது | சம்பந்தி போஜனம் | என்றும் |

இடம் விடாமையால்,

| | | | |
|---|---|---|---|
| சம்போ ! கந்தா ! | என்பது | சம்போகந்தா ! | என்றும் |

இடம் விடுவதினால்,

| | | | |
|---|---|---|---|
| மாதேவா ! | என்பது | மாதே வா ! | என்றும் |

இடம் மாறி இடம் விடுவதால்,

| | | | |
|---|---|---|---|
| தலைவி திவசம் | என்பது | தலை விதிவசம் | என்றும் |

வேறு எழுத்துப் புகுவதால்,

| | | | |
|---|---|---|---|
| பூணூலைத் தரித்தான் | என்பது | பூணூலைத் தகித்தான் | என்றும் |
| அவனுடைய மனைவி | ,, | அவளுடைய மனைவி | ,, |
| பாவியப் பெண் | ,, | பாவியப் பெண் | ,, |
| அன்பு நிறைந்த ஐயா ! | ,, | அம்பு நிறைந்த ஐயா ! | ,, |
| புலியைக்கண் டிறந்தான் | ,, | புலியைக் கண் திறந்தான் | ,, |
| கருடக்கொடி தூக்கி | ,, | கருமக்கொடி தூக்கி | ,, |
| அருமைக் குமரி | ,, | எருமைக் குமரி | ,, |
| பெருமாளே | ,, | பெருமாடே | ,, |

எழுத்து மாறி நிற்பதினால்,

| | | | |
|---|---|---|---|
| தர்மப்பள்ளி | என்பது | தமர்ப்பள்ளி | என்றும் |
| அதிகமானவர்கள் | ,, | அகதிமாணவர்கள் | ,, |
| சைவ புராணம் | ,, | வசை புராணம் | ,, |

உடைந்த எழுத்துக்களால்,

| | | | |
|---|---|---|---|
| தொலை தூரம் | என்பது | கொலை தூரம் | என்றும் |
| காரீயம் எங்கே ? | ,, | காரியம் எங்கே ? | ,, |
| தபம் பண்ணினன் | ,, | தடம் பண்ணினன் | ,, |
| ஆகாரம் உண்டா ? | ,, | ஆசாரம் உண்டா ? | ,, |
| தாகம் அதிகமா ? | ,, | காகம் அதிகமா ? | ,, |

எழுத்தே இல்லாமையால்,

| | |
|---|---|
| விஷயத்தைச் சொல் என்பது | விஷத்தைச் சொல் என்றும் |
| கருணைத் தடங்கடலாய் ,, | கருணைத் தடங்கலாய் ,, |
| கருணைகொண்ட ஐயா! ,, | கணைகொண்ட ஐயா! ,, |
| தலைலையைக் காணோம் ,, | தலையைக் காணோம் ,, |

குறைந்த எழுத்தினால்,

| | |
|---|---|
| பெண்ணைக் கொடுத்தவன் ,, | பெண்ணைக் கெடுத்தவன் ,, |
| பணத்தைத் தூண்டாதே ,, | பணத்தைத் தண்டாதே ,, |

எழுத்து மிகுதியினால்,

| | |
|---|---|
| பேருக்குப் பொருத்தமா? ,, | போருக்குப் பொருத்தமா? ,, |
| இருக்குவேதம் தெரியுமா? ,, | இஉருக்கு வேதம் தெரியுமா ,, |

இலக்கணப் பிழையால்,

| | |
|---|---|
| இராந்து உயிர் வாழாதே ,, | இறந்து உயிர் வாழாதே ,, |
| அறிந்து கொண்டாயா ¿ ,, | அரிந்து கொண்டாயா? ,, |
| கனம்பொருந்திய அண்ணா! ,, | கணம் பொருந்திய அண்ணா! ,, |
| குன்றின் மேலிட்ட விளக் கனைய ,, | குன்றின் மேலிட்ட விளக் கணைய ,, |

மாறுதல் காண்க. இன்னும் பலவுள. ஆயினும், விரிக்கிற் பெருகுமென்றஞ்சி இத்தோடு நிறுத்துகிறோம். மேலே குறிப்பிட்ட பிழைகளை மேற்போக்காகப் படிப்பவர்களைவிட சிறிது ஊன்றிப் பார்ப்பவர்களுக்கு அதிக மோசமான பொருள்கள் நன்றாய்ப் புலப்படும். இக்குற்றங்கள் யாரால் எவ்வாறு, எக்காலத்தில் நிகழுகின்றன? என்பதை அச்சுச்சாலை அதிபர்கள் நன்கறிய முடியும். ஆனால் நாமறிந்த மட்டில் இடம் விடுவதினாலும், இடம் விடாமையினாலும, இடம்மாறி இடம் விடுவதினாலும் ஏற்படுகின்ற குற்றங்கள் பெரும்பாலும் எழுதுகின்றவர்களினாலேயே நிகழுகின்றன. உடைந்த எழுத்துக்களினால் நேரிடுகின்ற குறையானது, பழைய எழுத்துக்களைப் புதிய எழுத்துக்களுடன் கலந்து அடுக்காமல் தனியே அடுக்கி, தனியே பிரித்து தனியே பதிப்பித்தால் நேரிடாது. ஒரு எழுத்திற்குப் பதிலாக வேறு எழுத்து வருகிற குற்றமானது அச்சடித்த எழுத்துக்களைப் பிரித்து அந்தந்த எழுத்தின் இருப்பிடத்தில் சரியாய்ப் போடாதவருடைய குற்றமாகும். புள்ளி இல்லாமையும், புள்ளி மிகுதிப் படுவதுமாகிய குற்றங்களும் இவ்வாறுதான் நிகழுகின்றன. ('க' அறையில் 'க்' கும் 'க்' அறையில் 'க' வும் போடுதல்) எழுத்துக்கள் இடம்மாறி வருவது அச்சு அடுக்கும்போது நேரிடுகின்ற குற்றமல்ல. பின் எப்போதெனில், அச்சுக்குப்போகும் தறுவாயில் திருத்தம் செய்யும்போதுதான் பெரும்பாலும் நேரிடுகின்றது. எழுத்தே இல்லாமற் போவது அவசர வேலையால் நிகழ்கின்றது. இலக்கணப் பிழைகளும் மற்றவைகளும் எழுத்துக் கோப்போருக்குச் சிறிதேனும் தமிழ்ப் பயிற்சி இருக்குமானால், நேரிடா. எல்லாவற்றிற்கும் மேலாக மாதிரித்தாளில் பிழைகண்டு பிடிப்பவர் படபடப்பற்றவராயிருந்து, பொறுமையோடு கவனிப்பவரா யிருப்பின் இக்குற்றங்களில் ஒன்றையுமே நிகழாமற் செய்யலாம்.

ஆகவே, அச்சுச் சாலைகளின் உரிமையாளர்களும், நூலாசிரியர்களும், மேற்பார்வையாளர்களும், எழுத்துக் கோப்பவர்களுமாகிய பலரும் நமது நாட்டின் நலத்தைக் கருதியாவது இவற்றைக் கவனிக்க வேண்டிக் கொள்ளுவதோடு "கவனிப்பீர்களா?" என்ற இச்சிறு கட்டுரையை முடிக்கின்றோம்.

கி. ஆ. பெ. விசுவநாத பிள்ளை, திருச்சிராப்பள்ளி.





## கிருஷ்ணலிங் அல்லது துப்பறியும் சீடன்.

(285-ம் பக்கத் தொடர்ச்சி.)

ஆனந்தலிங் சற்றுநேரம் சிந்தித்துப் பிறகு "வீட்டில் தங்கள் புத்திரிக்குப் பிரத்தியேகமான வேலைக்காரி அல்லது தோழி யிருக்கிறாளோ? அப்படியாயின் நான் அவளைக்கண்டு பேசுமாறு ஏற்பாடு செய்கிறீரா?" என்றான்.

உலகநாதம் பிள்ளை "ஆம் அத்தகைய ஆள் ஒருத்தி யிருக்கிறாள். இதோ நான் அவளை யனுப்புகின்றேன்" என்று சென்றார். அவர்சென்ற சில நிமிடங்களில் பிரகாசம் பொருந்திய கண்களையுடைய அழகிய ஒரு கன்னிகை ஆனந்தலிங் முன்புவந்து நின்றாள். அவள் பெயர் கங்காள். அவள் முகத்தால் அவள் அழுது கொண்டிருந்தாளென்பது தோன்றியது. ஆயினும் ஆனந்தலிங் அவள் துப்பறியும் ஆளைப் புதிதாகப் பார்ப்பதால் பயந்துவிட்டாள் என்று அறிந்துகொண்டான்.

ஆனந்தலிங் அவளைக்கண்டதே பட்சத்தோடு, "வா அம்மா! உன்பெயரென்ன"? வென்றான். அவள் "கங்காள்" என்றாள்.

ஆனந்த:—"கங்கா! உலகநாதம் பிள்ளை நான் இன்னாரென்று உனக்குக் கூறினாரா? நான் ஒரு துப்பறியும் உத்தியோகஸ்தன்" என்றான்.

அப்பெண் பயந்து இரண்டடி பின்னிடைந்தாள். ஆனந்தலிங் சற்று நேரத்திற்குள் பட்சமான மொழிகளால் அவள் பயத்தை நீக்கி அவளுக்குத் தைரியமுண்டாகச் செய்து, அவளைநோக்கி,

"குழந்தாய்! நான் நீ பிரியம் வைத்திருக்கும் மனோன்மணியைக் கண்டுபிடிக்க வந்திருக்கிறேன். நீ எனக்கு உதவி செய்கிறாயா?" என்றான்.

கங்காள்:—"என்னால் கூடியவரையில் உதவிசெய்யவே யெனக்குப் பிரியம்" என்றாள்.

ஆனந்:—நீ பூரண உதவி செய்வாயென்றே நான் நம்புகிறேன். ஆகையால் நேற்று முழுமையும் மனோன்மணி செய்த வேலைகளை யெல்லாம் நீ நன்றாய் மனதில் சிந்தித்துக்கொள். உனக்கு நல்ல கவனசுத்தி யிருக்கிறதென்றே தெரிகிறது. அதனால் நீ கூறுகிறவையாவும் உண்மையாகவே யிருக்கும். நீ கூறும் சங்கதிகளில் எதிலாவது ஒன்றிலிருந்து நான் அவள் சென்ற விடத்தை யறிந்து கொள்ளக்கூடும்.

கங்காள்:—என்னால் கூடிய வரையில் கவனமாய் நினைத்துக் கூறுகிறேன்.

ஆன:—நேற்று எந்த வேளைக்கு அவள் கடைசியாய் வெளிச் சென்றாள்?

கங்:—சுமார் 3-மணிக்கு.

ஆன:—காலையில் என்னசெய்து கொண்டிருந்தாள்?

கங்:—காலை முதல் தன் அறையில் உட்கார்ந்து வாசித்துக் கொண்டிருந்தாள். இடையில் அவள் தந்தை கூப்பிட்டதால் வெளியில் வந்து சற்று நேரங்கழித்து மறுபடி தன் அறைக்கே சென்று சிற்றுண்டியருந்தும் வேளை வரை யங்கேயே யிருந்தாள்.

ஆன:—சிற்றுண்டி யருந்தியபின் நேராய்த் தன் அறைக்கே சென்றாளோ?

கங்:—ஆம்.

ஆன:-பிறகு வீட்டை விட்டுச் செல்லுமட்டும் அறையிலேயே யிருந்தாளோ?

கங்:—இல்லை. சுமார் இரண்டு மணிக்கு எங்கோ சென்று அரை மணிநேரம் கழித்து வந்தாள்.

ஆன:—எங்குச் சென்றாள்?

கங்:—எங்குச் சென்றாளோ தெரியாது.

ஆனந்:—அவன் திரும்பிவந்ததும் என்ன செய்தாள்?

கங்கா:—வந்தவுடனே தன் உடைகளுக்குக் கொஞ்சம் ஓரத்தில் தைக்கும் சரிகைகள் வாங்கி வரும்படி என்னிடம் கூறினாள். நான் அவ்வாறே போய் வாங்கி வந்தேன். அப்போது அவள் வீட்டில் இல்லை. வேலைக் காரன் அவள் இப்போதுதான் சென்றாள் என்று கூறினான். அச்சமயம் நான் எதிரிலிருந்த கடியாரத்தைப் பார்த்தபோது மணி மூன்றடித்துப் பத்து நிமிடமாயிற்று.

ஆன:—அப்படியாயின் அவள் எங்குச் சென்றாளென்பது உனக்குச் சந்தேக மாய்க்கூடத் தோன்றவில்லையா?

கங்:—"இல்லையில்லை. கொஞ்சஞ் சந்தேகம்கூடத் தோன்றவில்லை" என்று கண்ணீர் விட்டுக் கொண்டே "ஆனால் எனக்குப் பெரிய பயமாயிருக் கிறது. அவளுக்கு ஏதோ பெரிய ஆபத்து நேர்ந்துவிட் டிருக்கவேண் டும்" என்றாள்.

ஆனந்தலிங் மிக்க அன்போடு, "கங்கா! அத்தகைய பயம் ஒன்றுமில்லை. நீ அதற்காகச் சற்றும் பயப்படவேண்டாம். இனிப்போய் உலகநாதம் பிள் ளையை இங்கு அழைத்துவா!" என்றான்.

உலகநாதம் பிள்ளை வந்ததே ஆனந்தலிங் அவரை நோக்கி "நேற்றுப் பிற்பகல் தாங்கள் என்ன செய்தீர்கள்?" என்று வினவினான்.

உலகநா:—நான் சிற்றுண்டி யருந்தியபின் பாங்கிக்குச்சென்று மாலை 5-மணிக்குத் திரும்பி வந்தேன். அதன்பின்...

ஆனந்:—நான் தெரிந்து கொள்ளவேண்டியது அவ்வளவே. மனோன்மணி தங்கள் மனைவியோடுகூட நேற்று எந்நேரம்வரை இருந்தாளென் பதைத் தங்கள் மனைவியிடம் நான் கேட்க வேண்டும்" என்றான்.

உலக:—அது எனக்குத் தெரியும். அவள் நேற்று முழுமையும் ஒரு விநாடி கூடத் தன் தாயார் கூட இருக்கவில்லை.

ஆனந்:—போதும்; வந்தனம். தங்கள் பொக்கிஷதாரனைப் பாங்கியில் காண லாமோ?

உலக:—நாலுமணி வரையில் அவன் அங்கிருப்பான். அதன்பின் வீட்டிற்கு வந்து விடுவான்.

ஆனந்:—அவன் எங்கு வசிக்கிறான்?

உலக:—அவன் கிழக்கு 15-வது வீதியில் 21-வது நம்பர் வீட்டில் அறைகள் எடுத்துக்கொண்டு அங்கு வசிக்கிறான்.

ஆனந்த:—வந்தனம். நான் போய் வருகிறேன்.

உலக:—நீர் ஏதாவது சங்கதி யறிந்து கொண்டீரோ?

(தொடரும்) ஆரணி-குப்புசாமி முதலியார்.




ஒரு மாஜிஸ்டிரேட்:—(வாதியை விசாரிக்கும்போது) "உன்னை அவன் அடித்ததற்குச் சாக்ஷியுண்டா?"

வாதி:—"சண்டை நடக்கும் நேரம் எனக்குத் தெரியாமல் போய்விட்டது; தெரிந்திருந்தால் முந்தியே ஒரு சாக்ஷியைத் தேடி என்னுடன் வைத்திருப்பேன்."

பென்ச் மாஜிஸ்டிரேட்:—(ஜலபாதைக்குப் போனவனைப் பார்த்து) "நீ ஏன் தெருவில் ஆபாசப் படுத்தினாய்?"

குற்றவாளி:—"அவசரமாய் வந்துவிட்டது; என்னால் அடக்கமுடியவில்லை."

பென்ச் மாஜிஸ்டிரேட்:—சரி; ஒரு ரூபாய் அபராதம்; கொடுத்துவிட்டுப்போ.

குற்றவாளி:—இன்னும் ஒருரூபாய் சேர்த்துக் கட்டிவிடுகிறேன்; நான் வெளியில் போனவுடன் ஜலபாதைக்கு வந்துவிடும்.

ஒருவர் கலெக்டராபீஸ் கிளார்க் வேலையிலிருந்து திடீரென்று மாஜிஸ்டிரேட் பதவியை அடைந்து விட்டார். உடனே அவர் அந்த வேலைக்குரிய விஷயங்களைத் தெரிந்துகொள்ளும் பொருட்டு முன் அந்த வேலையிலிருந்த நண்பரொருவரிடம் போய், "மாஜிஸ்டிரேட் வேலைக்கு முக்கியமாகத் தெரிந்துகொள்ளவேண்டியதென்ன?" என்றார். அதற்கவர் "வேறொன்றும் அவசியமில்லை; கேள்வி விசாரணை நடக்குங்காலத்தில் கக்ஷிக்காரர்களை வெகு முறுக்காக நோக்கி, அடிக்கடி, 'ஓய்! கேட்டதற்கு மாத்திரம் பதில் சொல்லும்' என்று அதட்டிச் சொல்லிக் கொண்டிருக்க வேண்டும்" என்றார்.

ஒரு ஜட்ஜி, ஒருவனுடைய கேஸை எடுக்கத் தொடங்கி அந்தக் கக்ஷிக்காரனிடத்தில் "உன்னுடைய வக்கீல் வந்து விட்டாரா?" என்றார். கக்ஷிக்காரன் "அவருடைய வேலை முடிந்துவிட்டது; இனி அவர் வரவேண்டிய அவசியமில்லை" என்றான். ஜட்ஜி "என்னவேலை முடிந்துவிட்டது?" என்றார். கக்ஷிக்காரன் "பீஸ்வாங்கும் வேலை முடிந்துவிட்டது" என்றான்.

வடக்கு தெற்காக இருந்துவந்த இருவர் ஓரிடத்தில் சந்தித்தனர். ஒருவர் மற்றவரை நோக்கி "நண்பரே! வழியில் ஒரு கீரைச் செடியைக் கண்டேன். அடடா! அதின் தண்டு உலகளந்த பெருமாளின் திருவடியைப்போல ஆகாயத்தை யளாவி யிருந்தது; ஒவ்வொரு இலையும் ஒவ்வொரு பிரமாண்டமோ என்று சொல்லும்படி அவ்வளவு பெரிதாயிருந்தது" என்றார். அதைக் கேட்ட மற்றொருவர், "அப்படியா? நான் கண்டதைக் கேளும்; வழியில் ஒரு குயவன் ஒரு சட்டிசெய்து கொண்டிருந்தான். அப்பப்பா! அது நீர் சொல்லியதைவிட மிகவும் பெரிதா யிருந்தது. நானே பிரமித்துவிட்டேன்" என்றார். அத்தகைய பெரிய சட்டி எதற்கோ? என்று கீரைச் செடியைக் கண்டவர் கேட்டார். அதற்கு மற்றொருவர் நீர் சொல்லிய கீரைகளைப் பறித்துப்பாகஞ் செய்து கடைவதற்கே போலும் என்றார்.

வீ, ஆ.

# மதிப்புரை.

(1) செந்தமிழிலக்கணம், முதற்பாகம்—எழுத்துஞ் சொல்லும் அடங்கிய இப்பயன்படு நூலொன்று இதன் ஆசிரியரான சிலோன் கௌரவ ஸ்ரீமான்-பொன்னம்பலம் இராமநாதன் அவர்களிடமிருந்து வரப்பெற்றோம்: நம்மிற்பலர் (முக்கியமாய் ஆரம்ப ஆசிரியர்—மாணவர் என்பாரிற் பெரும்பான்மையர்) இலக்கணத்தின் ஆவசியகத்தை யறிந்திருந்தும் அதன்கண் சிரத்தை யற்றிருக்கின்றனர். அந்நூலினிடை அவர்களுக்கு இன்பம் பயவாமையே அதற்குக் காரணமாயிருக்கலாம். அக்குறை யொழிய, இப்போது இந்நூல், எளியநடையில் யாவர்க்கும் இனிது விளங்க, பல ஆதாரங்களுடன் வெளியிடப்பட்டிருத்தலின் நாம் இதனையும், இதன் ஆசிரியரையும் பெரிதும் பாராட்டுகிறோம். அனைவரும் இதனைக் கைக்கொள்வாராக.

தமிழ்மக்களின் பேச்சையும் எழுத்தையும் திருத்தவந்த இந்நூலில் ஒன்பது பக்கங்கள் கொண்ட திருத்த அநுபந்தம் ஒன்று சேர்ந்திருப்பது பற்றி விசனிக்காமலிருக்கக் கூடவில்லை. ஆசிரியர், இலங்கையிலிருந்து கொண்டு சென்னையில் பதிப்பிக்க நேர்ந்த இந்நூலை மேற் பார்வையிடத் தமக்குச் சௌகரிய மில்லாமற்போயினும், சென்னையில் நிறைந்துள்ள பல வித்வ சிரோமணிகளுள் எவரைக்கொண்டேனும் பண்படுத்தியிருக்கலாம். மறு பதிப்பிலாவது இஃது எவ்விதக் குறைபாடுமின்றி வெளிவருமென நம்புகிறோம். எல்லாம்வல்ல இறைவன் இதன் ஆசிரியருக்கு நீண்ட ஆயுளையும், வேண்டிய உற்சாகத்தையும் அருளுவானாக.

(2) கணித எண்சுவடி:—விரிவாகவும் தெளிவாகவும் வந்துள்ள இந்நூல், விவசாயம், வாணிபம் என்னும் தொழிலிலுள்ள தமிழ்மக்களுக்கேயன்றி அவற்றிற் பயிற்சியுறும் மாணவர்முதலியோர்க்கும் பயன்படக்கூடியது. இதன் ஆசிரியர் திருச்சி ஸ்ரீமான்வெ. சுந்தரராஜ உபாத்தியாயர். இவர் முயற்சி பாராட்டத்தக்கது. இதில்கீழ்முந்திரிவாயிலிருந்து கீழ்வாயிலக்கம், பலவகை வட்டி, முத்து, மரம், குடிக்கூலி முதலிய பலவித கணக்குகள் விளக்கப்பட்டிருக்கின்றன. சிலபிழைதிருத்தங்களு முள்ளன. அவற்றைத் திருத்திக்கொள்ள வேண்டியது. அச்சு சில பக்கங்களில் நன்றாய்ப் படியவில்லை. இரண்டாம் பதிப்பிலாவது இதனை ஆசிரியர் கவனிப்பாராக.

(3) பிரதாப சந்திரன்:—இதன் மறு பெயர் சந்திரசேகரன். இதன் ஆசிரியர் சென்னை, ஸ்ரீமான் G. B. மகாலிங்கய்யர். இஃதொரு இனிய ஹிந்து குடும்பகதையாயினும் அச்சுப்பிழை முதலிய சிலபிழைகள் இதிலிருக்கின்றன. மறு பதிப்பில் ஆசிரியர் இவற்றைச் சரிசெய்வாராக.

இதன் விலை அணு 4.

(4) ஞான இரகசிய சிந்தாமணி:—இஃதொரு வேதாந்தநூல். இதில் பரமாத்ம, ஜீவாத்ம இலக்கணங்களும், ஆன்மாக்களின் நன்மை தீமைகளுக் கேதுவான பலவிஷயங்களும் திருத்தமான செந்தமிழில், நன்னடையில் சிறந்த மேற் கோள்களுடன் பலர்க்கும் பயன்படும் வண்ணம் எழுதப்பட்டுள்

ளன. கற்றோரே யன்றி மற்றோரும் படிக்கத்தக்க நூல் இது. இதன் ஆசிரியர் "விசாலஹிருதயம்" பத்திராசிரியரான ஸ்ரீமான் ராம சுப்பிரமணிய நாவலரவர்கள். விலை அணா 8. சென்னை, வெஸ்ட் அண்டு கம்பெனியார் மூலமாக இதன் ஆசிரியருக் கெழுதின், இது விலைக்குக் கிடைக்கும்.

(5) தமிழின் தற்கால நிலைமை:—இது தமிழ் மக்கள் கவனித்தற்குரியது; நடை உயரியது. மேலே 4-வது பிரிவில் குறித்துள்ள திருவாளரே இதன் ஆசிரியர். விலை அணா 6.

(6) பக்திமார்க்கம்:—சுவாமி பரமாநந்தர் ஆங்கிலத்தில் அருளிய இதனை, இனிய தமிழில், பவானி ஸ்ரீமான் R. ராமகிருஷ்ணன் B. A, அவர்கள் மொழி பெயர்த்துள்ளார். இது பக்தி மார்க்கத்தை அவலம்பித்து நலனடைய விரும்புவோர்க்குப் பெரிதும் பயன்படக் கூடியது; சென்னை, மயிலை ஸ்ரீராம கிருஷ்ண மடத்தில் கிடைக்கும்.

(7) முத்திநெறி:—இஃதோர் ஆத்மார்த்தமான வேதாந்த நூல். ஸ்ரீமத் இராம கிருஷ்ணானந்த ஸ்வாமிகள் ஆங்கிலத்தில் வெளியிட்ட இது செந்தமிழில், தெள்ளிய நடையில் மொழி பெயர்க்கப் பட்டுள்ளது; ஸ்வாமி யதீசுவரானந்தா என்பவரின் முன்னுரையோடு கூடியது. சென்னை, மயிலை ஸ்ரீராம கிருஷ்ண மடத்தில் கிடைக்கும்.

(8) அனுபவ அவுடத வைத்திய முறை:—இதன் ஆசிரியர் யாழ்ப்பாணம், சித்தங்கேணி பிரமஸ்ரீ பா. சண்முகக் குருக்கள்; ஒவ்வொரு குடும்பத்திலும் இருக்கவேண்டிய நன்மை விளக்கும் நூல் இது.

(9) ஜெனன ஜாதகக் குறிப்பு:—ஆசிரியர், கும்பகோணம் ஜெம்பக மல்லி திருவாளர் அ. சீனிவாச செட்டியார். இக்குறிப்புப் புத்தகம் ஒவ்வொருவருடைய ஜாதகத்தையும் தெளிவாக எழுதி வைத்துக் கொள்வதற்கு மிகவும் அனுகூலமாகும். இதன்விலை அணா6.

(10) வேளாளர் தோற்றமும் அவர்தம் வரலாறும்:—இந்நூலியற்றியவர் திருவாளர் வல்லை - பால சுப்பிரமணியம். இதில் வேளாளரின் உயரிய நிலை பற்பல சங்க நூல்கள், பக்தி நூல்கள் முதலியவற்றிலுள்ள ஆதாரங்களோடு எழுதப் பெற்றுள்ளது. ஒரு சாராரே கொண்டாடக் கூடிய இது தற்காலத்தில் சமரசத்தையும் ஒற்றுமைப் பேற்றையும் எங்கும் நாட்டத் தக்க ஆதாரங்களிற் றலையிட்டுள்ளார்க்குப் பிரதி கூலமாயிருப்பினும், 'தங்குல முதலிய வுயர்வைத் தாபிக்க முற்படுந் திறமைபெறுவது கல்வியாளரின் கடமை' யென்னும் சிந்தாமணி முதலிய நூல்களின் கருத்தை யொட்டி இதன் ஆசிரியர் இதிற் புகுந்தது மெச்சத் தக்கதே.

குறிப்பு:—இன்னும் சில நூல்களுமிருக்கின்றன. அவை பின்னர் வெளியிடப்படும்.



# வர்த்தமானப்பகுதி

**பூத பௌதிக சாஸ்திரிகள் நீண்ட ஆயுளுடன் இருப்பதேன்:—** பூத பௌதிக சாஸ்திரிகள் மற்றவர்களைக் காட்டிலும நீண்ட ஆயுளைப் பெற்றிருக்கிறார்களா என்று கவனித்தால் அவர்கள் மற்றத் தொழில்களில் ஈடுபட்டிருப்பவர்களைக் காட்டிலும் நீண்ட நாட்கள் வரை உயிருடன் இருக்கிறார்கள் என்பது பெறப்படுகிறது. சமீபத்தில் ஒருவார காலத்தில் கீழ்க்கூறும் பத்து பூதபௌதிக சாஸ்திரிகள் தக்க வயதாயின பின்னர் இறந்து விட்டிருக்கின்றனர். அவர்களின் பெயரும் இறக்கும்போது அவர்களுக்கு ஆகியிருந்த வயதும் வருமாறு:—

| | | |
|---|---|---|
| ஸ்ரீ பி. லூவிஸ்ரைஸ் (சிலாசாசன) ஆராய்ச்சிக்காரர் | ... | 89 |
| ஸ்ரீ ஜான் மேக்லியாட்டு (கணிதசாஸ்திரி) | ... | 86 |
| ஸ்ரீ ஜெ. எச். ரெயினால்ட்ஸ் (வித்தியாவிலக்கணி) | ... | 85 |
| ஸ்ரீ சார்லஸ் போர்டு (தாவரசாஸ்திரி) | ... | 83 |
| ஸ்ரீ டப்ளியு. எஸ். வாலியண்ட் (பூதத்துவசாஸ்திரி) | ... | 81 |
| ஸ்ரீ மிட்டாக். லெப்லர் (கணிதசாஸ்திரி) | ... | 81 |
| ஸ்ரீ ஹார்கிஸ்ட் (விலங்குநூல் சாஸ்திரி) | ... | 75 |
| ஸ்ரீ ஹட்சன்மாக்சிம் (நூதனபொருள் காணுவோர்) | ... | 74 |
| ஸ்ரீ ஏ. கோசால் (தேகநூல் சாஸ்திரி) | ... | 73 |
| ஸ்ரீ ஜி. பி. சத்வொர்த் (தாவரசாஸ்திரி) | ... | 63 |

இதைக்குறித்து ஒரு புத்தகவியாபாரி, சர் ரிச்சர்ட் கிரகோரி எனும் பூத பௌதிக சாஸ்திரியைக் கேட்க, அவர், பூதபௌதிக சாஸ்திரிகள் உடலோம்பல் விஷயத்தைச் செவ்வையாய் அறிந்துள்ளபடியால் அவர்கள் அதற்குத் தக்கபடி நடந்துகொண்டு சக்தியை வெளியோட்டாமல் பாதுகாத்து வருவதே காரணமாயிருக்கலாமென்று குறிப்பிட்டார்.

நடிகர்கள், பாடகர்கள், நூலாசிரியர்கள் ஆகிய இவர்கள் வெருட்டல் அதட்டல் வீரம் பேசுதல் ஆகிய இக்குணங்களைக் கொண்டவர்களாயிருப்பதால் அவர்கள் நீண்டநாள் வாழ்ந்திருக்கக் கூடவில்லை; பூத பௌதிக சாஸ்திரிகளுக்கு அத்தகைய ஒன்றுமில்லாதபடியால் அவர்கள் நீண்ட ஆயுளுடன் கூடியவர்களாயிருக்கிறார்கள் என்றும் குறிப்பிட்டார்.

*** *** ***

**கையின் நிறத்தைக்கொண்டு வியாதிகளைக் கண்டுபிடித்தல்:—**கையிலுள்ள நகங்களின் விரல்களைக்கொண்டு சில வைத்தியர்கள் தேகத்திலுள்ள வியாதிகளைக் கண்டறிந்து வந்தார்கள். ஆனால் பெரும்பாலான வைத்தியர்கள் அவ்விஷயமாகக் கவலை செலுத்தாமலே இருந்துவந்தார்கள். அகத்தினழகு முகத்தில் தெரியும் என்பதற்கிணங்க முகத்தைக்கொண்டு ஒருமனிதனுடைய எண்ணங்களையும் அவனுக்குள்ள நோய்களையும் பெரும்பாலும் கண்டுபிடித்துவிடலாம்; ஆனால் கையைக்கொண்டு இது போழ்து வியாதிகளைப் பூராவாகவும் கண்டுபிடித்துவிடலாமென்று ஸ்ரீமான் ஜாக்சன், 'பியர்சன்ஸ் மேகஜைன்' எனும் பத்திரிகையில் எழுதுகிறார்.

